ஸ்ரீ

ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

—○●○—

ஸ்ரீ உ.வே.வை.மு. கோபாலக்ருஷ்ணமாசார்யரால்
(17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி)
தமிழ் நடையால் எழுதிய உரையுடன்

—○●○—


**வை. மு. நரசிம்மன்**

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி,
17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

விகாரி ௵ தை மீ } 1960 [விலை 8 அணா

# முகவுரை

தமிழ் நேசர்களே ! ஆரிய வறிஞர்களே ! ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் தமிழ்வேதமென்னப்படுகின்ற திவ்ய ப்ரபந்தங்களை, ஸ்ரீமந்நாதமுனிகள் என்னப்படுகின்ற பெரியார், நம்மாழ்வாரிடத்தினின்று உணர்ந்து, அந்த நாலாயிரம் பாசுரங்களையும் முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என நான்கு பாகமாகப் பகுத்துள்ளாரன்றோ ! அவற்றுள் முதலாயிரத்தைச் சேர்ந்த திருப்பாவை யென்பது, மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் ஆர்வத்தளவன்றிப் பொங்கும் பரிவு கொண்டதனாற் பெரியாழ்வாரென்று பெயர் பெற்றவர்க்குத் திருமகளாரான ஆண்டாள் அருளிச்செய்தது : ஆதலால், அப்பெரியாழ்வார் அருளிச்செய்த திருப்பல்லாண்டு பெரியாழ்வார்திருமொழி இவைகட்கு அடுத்தாற்போல முதலாயிரத்தில் மூன்றாவது பிரபந்தமாகும்.

தமக்கு முன்புள்ளாரையும் பின்பு உள்ளாரையும் தமது சம்பந்தத்தால் ஈடேற்றுபவரும் உபயவிபூதியைசுவரியத்தையும் எம்பெருமானருளால் தமது உடைமையாகப் பெற்றவதனால் 'உடையவர்' என்று திருநாமம் படைத்தவரும் நமது சித்தாந்தத்துக்கே எம்பெருமானார் தரிசனம் என்று பெயருண்டாம்படி தரிசனத்தை வளர்த்தவருமான எம்பெருமானாரும், மற்றைப் பிரபந்தங்களெல்லாமிருக்க 'திருப்பாவைச்சீயர்' என்று தம்மைச் சொல்லுமாறு இந்தப் பிரபந்தத்தில் ஈடுபட்டாரென்றால், இதன் பெருமையை உள்ளபடி சொல்லுதல் அடியேனைப் போன்றவர்கட்கு முடியுமோ ?

இப்படிப்பட்ட மகிமையையுடைய இந்தப் பிரபந்தத்துக்கு முன்னோர்கள் அருளிச்செய்துள்ள மணிப்ரவாளவ்யாக்யானங்கள் பல உள்ளன : அவற்றுள் மிகவும் பிரசித்தமாக வழங்குவன - பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த மூவாயிரப்படியும், அழகிய மணவாளப்பெருமாள்நாயனார் அருளிச்செய்த ஆறாயிரப்படியும், பெரிய பரகாலஸ்வாமி வ்யாக்யானமும், சுத்த ஸத்வம் தொட்டயாசார்யரும் வானமாமலைச்சீயரும் அருளிச்செய்த ஸ்வாபதேச வியாக்யானங்களும் ஆகும்: இன்னும் உள ; இந்த வியாக்யானங்களிலுள்ள அரிய விஷயங்கள் பலவற்றையும் யாவரும் தெரிந்துகொள்ளுமாறு செய்யவேண்டுமென்று எழுந்த ஆ[illegible] மேலீட்டால், அடியேனது தகுதியின்மையையும் சிந்தியாமல், வியாக்கியான விஷயங்களைத் தழுவி, சொற்பொருளும்

ப்தஸாரமும் உள்ளுறைபொருளும் விளங்க உரையெழுதத் துணிந்தேன். இதில் இலக்கண விஷயங்களும் அமைந்துள்ளன. இதிலுள்ள குற்றங்குறைகளை யுணர்ந்த பெரியோர் தம் நற்குணத்தாற் பொறுத்துக்கொண்டு அடியேனுக்குத் தெரிவிப்பராயின், அவர்களுடைய திருவடிகளை முடிமேல் வகித்து அவற்றைத் திருத்தி வெளியிடுவேன்.

ஸ்ரீ வைஷ்ணவதாஸன் வை. மு. கோபாலகிருஷ்ணன்

## இரண்டாம் பதிப்பு

இந்தத் திருப்பாவைப் பதிப்பு முற்பதிப்பை யொட்டியே அமைந்துள்ளது. எனினும், இக்காலத்துத் தமிழகத்துத் திருப்பாவை மக்கள் பல்லோராலும் பெரிதும் போற்றிப் பயிலப்பட்டு வருதனோக்கிச் சிற்சிலவிடங்களில் அடியேனுக்குத் தோற்றிய சில விஷயங்களையும் விளக்கங்களையும் மெருகுறச் சேர்த்துள்ளேன். §-இக்குறியிடப்பட்டு எழுதப்பட்டுள்ளனவும், 1, 2 3-என எண்ணிட்டுக் கீழ்க்குறிப்பாக எழுதப்பட்டுள்ளனவும் அடியேனால் சேர்க்கப்பட்டவை. அவையிற்றில் குற்றங்கள் காணப்படின், அவை என் மந்த புத்தியாலேற்பட்டவை யெனக் கொண்டமையுமாறு வேண்டுகிறேன்.

தாஸன் - கோ. ஜெகந்நாதன்.

# ஆண்டாள் வைபவம்

பாண்டியநாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் விட்டுணுசித்தரென் கின்ற பெரியாழ்வார் நந்தவனம் அமைத்துத் திருமாலுக்குச் சமர்ப் பிக்கத் திருத்துழாய் முதலியன வைத்து வளர்த்துவரலானார்: அவர் திருத்துழாய்க்குப் பாத்தியமைக்கக் களைக்கொட்டுக் கொண்டு கொத்துகையில் கொத்தின நிலத்தில் ஒரு பெண் மகவு காணப்பட்டது. அந்தப் பெரியாழ்வார் தாம் கண்ட அந்தக் குழந்தையைத் தம் மகளாகப் பாவித்துக் கோதை என்று பெயரிட்டு வளர்த்துவந்தார்.

அந்தக்கோதை, தனது தந்தை முதலியோரும் கண்டு வியக்கும்படி எம்பெருமானிடத்திற் பேரன்புகொண்டு அவனையே தான் மணஞ்செய்துகொள்ள விரும்பி, நாடோறும் *வடபெருங் கோயிலுடையானுக்குச் சமர்ப்பிக்கும் பொருட்டுப் பெரியாழ்வார் கட்டிவைத்த திருமாலையை அவரில்லாத சமயம் பார்த்து எடுத் துத் தான் கூந்தலிலே சூட்டிக்கொண்டும் சிறந்த ஆடை யாபரணங்களை யணிந்துகொண்டும் 'அப்பெருமானுக்கு நான் ஏற்றவளோ? இல்லையோ?' என்று தன்னுடைப்பனையழகைக் கண் ணாடியிலே கண்டு, தந்தையார் வருவதற்கு முன்னமே மலர் மாலையைக் களைந்து முன்போலவே செண்டாகச் சுற்றி நலங் காமல் வைத்துவருவாள். இப்படிப் பலநாள் கழிகையில் ஒருநாள், வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டுவந்த பொழுது பெருமானுக்கென்று தொடுத்த பூமாலையைக் கோதை சூடியிருப்பது கண்டார்: சினங்கொண்டு 'பெண்ணே! நீ செய்த இது அபசாரமான காரியம்: இனி இப்படிச் செய் யாதே' என்று அதட்டி நற்புத்தி சொல்லிவிட்டு, அன்று பெரு மானுக்கு அந்த மாலையைச் சாத்தாமல் மனம் வருந்தியிருந்தார்: அன்று இரவில் *வடபத்திரசாயி ஆழ்வாரது கனவிலே தோன்றி 'இன்று நீ நமக்கு மாலைகொண்டு வராதிருந்தது என்?' என்று வினவ, ஆழ்வாரும் தமது மகளின் தகுதியில்லாச் செயலை விண்ணப்பித்தார். அதுகேட்ட பெருமான், 'அவள் சூடிக்கொடுத்த மாலையே நமது மனத்துக்கு உவப்பாவது; ஆகையால், இனி அப்படிப்பட்ட பூமாலையையே நமக்குக் கொணர்க' என்று அருளிச் செய்தான். உடனே கண் விழித் தெழுந்த ஆழ்வார், உலகத்தாரை உய்விப்பதற்காகத் திரு மகளே இவ்வாறு தமது குமாரியாகத் திருவவதரித்தாளெனத் துணிந்து, அந்தக் காரணத்தினால் அவளுக்கு 'ஆண்டாள்' என் றும், எம்பெருமானுக்குச் சமர்ப்பிக்கவேண்டிய மாலைகளைச் சூட்டிக்கொண்டு கொடுத்த காரணத்தினால் 'சூடிக்கொடுத்த நாச் சியார்' என்றும் பெயரிட்டு, அதுமுதற்கொண்டு தம்மகளை அப் பெயர்களினால் அழைக்கலானார்.

நாள் செல்லச்செல்ல ஞானமும் காதலாகிய பக்தியும் விஞ்சி வளரவே, இந்தக்கோதை 'எம்பெருமானைத் தழுவி முழுவிக்

---

*ஸ்ரீவில்லிபுத்தூரில் கோயில் கொண்டுள்ள திருமாலின் பெயர்.

கலக்கவேணும்' என்று பெருவிருப்பம் கொண்டாள். இவள் நினைத்தபடி எம்பெருமான் முகங்காட்டவில்லை: அதனால் மிக வருந்திய இவள் என் செய்யலாமென்று ஆலோசிக்கலானாள். அப்போது 'திருமால் ஸ்ரீ கிருஷ்ணனாகத் திருவவதரித்திருந்த காலத்தில் திருவாய்ப்பாடியிலுள்ள பெண்பிள்ளைகள் அப்பிரானை நினைத்தபடி யனுபவித்தார்கள்' என்பது நினைவிற்கு வந்தது: அந்த க்ருஷ்ணாவதாரம் வெகு நாளைக்கு முந்தியது ஆகையால் தான் நினைத்தபடி அவனைப் பெற முடியாதே யென்று பின்னும் வருந்தலானாள்: அப்போது சில தார்மிகர்கள் "முன்பு ஸ்ரீ க்ருஷ்ணனும் திருவாய்ப்பாடிப் பெண்களும் கைகோத்துக் குரவைக் கூத்தாடிப் பேரானந்தத்தி லிருக்கையில், 'இவர்களால் இந்தப் பெருமகிழ்ச்சியைத் தாங்கப்போகாது' என்று ஸ்ரீ க்ருஷ்ணன் ஒளிந்துகொள்ள, அந்தப்பெண்கள் தங்களாற்றாமையாலே ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் இங்ஙன் பலபடி பாவனைசெய்து ஆறினார்கள்" என்று சொல்லினர்: உடனே இந்தக் கோதையும் அந்தத் திருவாய்ப்பாடிப் பெண்களைப்போலவே நோன்புநோற்றுத் தன்னாற்றாமையைத் தவிர்க்கப் பார்க்கலானாள்: அப்படிச் செய்யுமிடத்துப் பாவனையின் மிகுதியினாலே, தான் இடைக்கன்னிகைகளின் தன்மையை யடைந்து, தன்னுடைய ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், ஆங்குள்ள வடபெருங்கோயிலே க்ருஷ்ணனை வளர்த்த தந்தையாகிய நந்தகோபரின் திருமாளிகையாகவும், ஸ்ரீவில்லிபுத்தூரில் பள்ளிகொண்டிருக்குந் திருமாலான வடபெருங்கோயிலுடையானே ஸ்ரீ க்ருஷ்ணனாகவுங் கொண்டு நோற்கலானாள்: அச்செயலைப் பின்புள்ளாரும் அறியுமாறு திருப்பாவை என்ற பிரபந்த மூலமாகத் தெரிவிக்கலானாள்.

அப்போது இஷ்டபூர்த்தியாகாதபடியினால் அந்தக்கோதை காமனைக் குறித்து நோற்பதும், ஆய்ச்சிமார்க்கும் கிருஷ்ணனுக்குமாக நடந்த வரலாறுகளைப் பாவனை செய்வதும், மேகம் முதலிய பொருள்களைத் தூதுவிடுவதும் முதலிய மானசிக அனுபவங்களை 'நாச்சியார் திருமொழி' என்கிற பிரபந்தத்தின் மூலமாக வெளியிட்டாள்.

இங்ஙன் நிகழ்கையில், தமது குமாரிக்கு விவாகத்துக்கு ஏற்ற பருவம் வந்ததையும், மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழமாட்டாத அவளது தன்மையையுங் கண்டு பெரியாழ்வார் சிந்தைகொண்டு அயர்ந்திருக்க, ஸ்ரீரங்கநாதன் ஆழ்வாருடைய கனவில் தோன்றி 'உமது திருமகளை திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அழைத்துக்கொண்டு வாரும்; நாம் அங்கீகரிப்போம்' என்று அருளிச்செய்து ஸ்தாநீகர் முதலியோர்க்கும் வெகு சம்பிரமத்துடனே கோதையைப் பல்லக்கிலேற்றி அழைத்துவரும்படி சொப்பனத்திற் கட்டளையிட்டான். அக்கட்டளையின்படியே கோயிலைச்சார்ந்த எல்லாப் பரிகரத்தாரும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்குச் சென்று நம்பெருமாளின் கட்டளையை விண்ணப்பிக்க, ஆழ்வார் மிகவும் மனமுவந்து வடபெருங்கோயிலுடையானிடம் விடைபெற்றுக்கொண்டு பிரயாணமாயினார். அதனைக் கேள்வி

யுற்ற பாண்டியவரசன் கோதையின் திருமணத்தைச் சிறப்பாக நடத்தக் கோலி, ஸ்ரீ வில்லிபுத்தூர்முதல் திருவரங்கம்வரை யிலும் அலங்கரிக்க ஏற்பாடு செய்து, சதுரங்க சேனையோடு ஆழ்வாரிடம் வந்து சேர்ந்தான்.

பிறகு பெரியாழ்வார் ஆண்டாளை மணிப்பல்லக்கி லெழுந் தருளப்பண்ணி மங்களவாத்தியத்துடனே 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி வந்தாள், திருப்பாவை பாடிய செல்வி வந்தாள், வேயர்குலத்து விளக்கு வந்தாள்' என்று சின்னங்கள் பணிமாற, மெய்காப்பாளர் உடன் சூழ்ந்துவரத் தாமும் அரசனுமாக இரு புறத்தும் இடைவிடாதிருந்து அழைத்துவந்து திருவரங்கம் பெரிய கோயிலை யடைந்தார்: பெரியபெருமாளுடைய முன் மண்டபத்திலே ஆண்டாளை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கப் பண்ணுவிக்கையில், காந்தம் இரும்பை இழுப்பதுபோல அப் பெருமானது திவ்விய சௌந்தரியம் அப்பிராட்டியை யிழுக்க, ஆண்டாள் சிலம்பார்க்க நுண்ணிடை நுடங்க மென்னடை கொண்டு அப்பெருமானது அருகிற்சென்று அப்பரமனது திரு வடி பிடிக்கக் கருதி நாகவணையை மிதித்தேறி அந்த நம்பெரு மானது திருமேனியிலே இரண்டறக் கலந்து அப்பரமனை என் றும் பிரியாதிருப்பவளாயினள்.

இந்தப் பெண்புலவரின் காலம்:—மிகப்பழமை சிறப்பை யுண் டாக்குமென்ற கொள்கைகொண்ட ஒருசாரார், இவர் காலம் ஏறக்குறைய ஐயாயிரம் வருஷத்துக்கு முந்தியாகுமென்பர்: ஒரு சார் ஆராய்ச்சியாளர் திருப்பாவை கி. பி. 731-இல் தோன்றிய நூலாயிருக்க வேண்டுமென்றும், இவர்காலம் எட்டாவது நூற் றுண்டென்றும் கூறுவர்: வேறு சிலர் ஒன்பதாம் நூற்றுண் டென்பர்.

கோதை பிறந்த தினம், திருவாடிப்பூரம்.

---

# திருப்பாவை

## அவதாரிகை

திருப்பாவை யென்ற நூற்பெயர்க்குக் காரணமும், பாவை யென்ற பிரபந்தத்தின் இலக்கணமும்:—பாவை-பிரதிமை: இங்கு, மணலாற் செய்யப்பட்ட காத்தியாயனி [காத்தியாயனி-மகாகாளி] யின் வடிவம்: இச்சொல்-அப்பாவையைக் குறித்துச் செய்யப்படும் நோன்புக்குஆகி, பிறகு அந்நோன்பைத் தெரிவிக்கும் பிரபந்தத் துக்கு ஆயிற்று: இருமடியாகுபெயர். பாவைஎன்பது நோன்பு என்றபொருளில் "நம்பாவைக்குச் செய்யும்கிரிசைகள்-கேளீரோ," "நாங்கள் நம்பாவைக்குச் சாற்றிநீராடினால்" என்று இந்நூலில் தானே வந்துள்ளது.[1] இனி, பாவாய்என முடிவதுபற்றி, பாவை என்பதற்குமுன் 'திரு' என்பதைச் சேர்த்தலால் 'திருப்பாவை'

---

1. 'பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்' என்றதும் காண்க.

எனப் பெயர்வந்த தென்பாரு முளர்; இது பொருந்தமாயிற் கொள்க. (மாணிக்கவாசகர் இவ்வாறுன பிரபந்தத்திற்கு 'திருவெம்பாவை' எனப் பெயரிட்டுள்ளார்.) வெண்டளையால் வரும் கொச்சகக் கலிப்பாவாற் பாடுவதும், ஈற்றடியில் 'ஏலோரெம்பாவாய்' என்பது மகுடமாய் வருவதும்-பாவையென்னும் பிரபந்தத்துக்கு இலக்கணம்போலும்; (சைவ சமயாசாரியரி லொருவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் பாடலிலும் இங்ஙனமே வருவதும், யாப்பருங்கலவிருத்தியிற் காட்டிய உதாரணச் செய்யுளில் "கோழியுங்கூவின குக்கிலழைத்தன, தாழியுணீலத் தடங்கணீர் போதுமினோ, ஆழிசூழ்வையத் தறிவனடியேத்திக், கூழைநனையக் குடைந்துங்குளிர்புனல், ஊழியுண்மன்னுவோ மென்றேலோரெம்பாவாய்" என்று வருவதுங் காண்க.)

† இந்தத் திருப்பாவையிற் கூறப்படும் வெளிப்படைப் பொருள்:— இளங்கன்னிமார் தம்முடன் நோன்புநோற்பதற்கு வரவிரும்புபவர்களையும் அவர்கள் உறங்கினாலும் எழுப்பித் தம்முடன் அழைத்துக்கொண்டு, தாம் செய்யும் நோன்பை இடையூறு வாராமற் காக்கும்படி ஏற்பட்ட க்ருஷ்ணனாகிய தலைவனைக்கிட்டித் தமது நோன்புக்கு வேண்டியவற்றைப் பெற்றன ரென்பது: இவ்விஷயம்-"வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத், திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி, அங்கப்பறை கொண்டவாற்றை யணிபுதுவைப், பைங்கமலத் தண்டெரியற் பட்டர்பிரான் கோதை சொன்ன, சங்கத்தமிழ்மாலை முப்பதும்" என்ற இறுதிச் செய்யுளாற் பெறப்படும்.

இந்தத் திருப்பாவையின் உட்பொருள்-பெண்கவியான கோதையார் ஞானமும் வைராக்கியமும் மிகுந்து, தாமே போய் எம்பெருமானை

---

† திருப்பாவையின் முப்பெரும் பிரிவு:—

திருப்பாவை முப்பது பாசுரங்களின் போக்கை ஆய்ந்து பார்ப்பின் முப்பெரும் பிரிவுக்குள் அடங்குதல் தேற்றம்.

(i) பாயிரம்:—இஃது முதற்பாசுரம் முதல் ஐந்தாம் பாசுரம் வரையுள்ள பகுதி. "ஆயிர முகத்தான் அகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே" என்றது நன்னூல் (சூ. 54); எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரமுரைத்துரைக்க என்பது மரபு. இதனால், திருப்பாவை சீரிய பனுவலாகும் என்பது பெறப்பட்டது.

(ii) துயிலெடை:—முன்னர்த் துயிலுணர்ந்தோர் உறங்குபவரை யெழுப்புதல்: இஃது ஆறும் பாசுரம் முதல் பதினைந்து பாசுரம் வரையுள்ள பகுதி.

(iii) பலசம்ருத்தி:-ஆயர் சிறுமியர் கண்ணனை யெழுப்பக்கோலி ஆங்குள்ளவர்களையும் எழுப்பிப்பின் கண்ணனை யெழுப்பிக் கிட்டி வேண்டிய பயனைப்பெறுதல்: இஃது பதினாறும் பாசுரம் முதல் இறுதிவரையுள்ள பகுதி.

யடைந்து 'உனக்கு அடிமையாயிருக்கிற இந்த ஆத்துமா இந்தப் பிரபஞ்சத்தில் உழன்று அலையாதபடி தனக்குத்தகுதியான திருத்தொண்டைச் செய்யுமாறு திருவருள்புரியவேண்டும்' என்று பிரார்த்திப்பது. இவ்விஷயம், "எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு, உற்றோமேயாவோம் உனக்கே நாமாட் செய்வோம், மற்றைநங்காமங்கள் மாற்று" என்று வரும் இருபத்தொன்பதாவது செய்யுளால் அறியப்படும்.

இந்தப்பிரபந்தத்திற் கூறப்பட்டுள்ள நோன்பு கூறப்பட்டுள்ள வேறு இடமும் கூறப்பட்டுள்ள விதமும்:—கோகுலத்திலுள்ளவரான இடைச்சிறு பெண்கள் மார்கழி மாதத்திலே காத்தியாயனீ விரதத்தைத் தொடங்கினர். அதற்குஏற்ப அந்தப் பெண்கள் அருணோதயகாலத்திலே எழுந்திருந்து தமது தோழிமார்களைக் கூப்பிட்டு உடனழைத்துக் கொண்டு கைகோத்தவண்ணம் ஸ்ரீ க்ருஷ்ணசரிதத்தைப் பாடியபடியே போய் நீரிலே துளைந்துவிளையாடி மூழ்கி மணலினாலே காத்யாயனீயென்ற மஹாகாளியின் வடிவை யமைத்துத் தாம் அமைத்த காத்தியாயனியைக்குறித்து 'தேவி! நந்தகோபன் குமரனை எமக்குக் கணவனாகும்படி வரந்தருக' என்று சொல்லிய வண்ணம் அருச்சித்துக் கொண்டே வெறுஞ் சோற்றைமாத்திரம் உண்பவராய் ஒருமாதகாலம் கழித்தனர்: இம்மாதர்களின் மெய்யன்பைப் பலபடியாலும் கண்டறிந்த ஸ்ரீ கிருஷ்ணன் தன்னிடத்துப் பேராதரத்தினாலேயே நோன்பு நோற்ற அந்த இடைச்சிறுமியரின் கருத்தை யுணர்ந்து 'நோற்ற பயன் கைகூடப்பெற்றவர்களாய், நீங்கள் வரும் இரவுகளில் என்னுடன் மகிழ்ந்திருப்பீர்கள் என்று அருளினான்' என்பது ஸ்ரீ பாகவதத்திற் கூறப்பட்டுள்ளது.

'இந்தப்பிரபந்தத்திற் கூறப்பட்டுள்ள நோன்பு எதைக் குறிப்பது? செய்யப்படும் காலம் யாது? அதனாற் பெறலாகும் பயன் என்ன?' என்பவை முதலிய விஷயங்களை இப்போது ஆராய்வோம்: இந்தத் திருப்பாவையிற் கூறும் மார்கழிநோன்பு காத்தியாயனீவிரதம் அல்லது மார்கழி நீராடல் எனப்படுமென்பதும், இது தொடங்கப்படுங்காலம் மார்கழி மாதத்துப் பூர்ணிமையாகுமென்பதும், மழை பெய்வதற்காகவும் தக்க கணவனைத் தாம் அடைவதற்காகவும் இளங்கன்னிமார் இந்நோன்பைச் செய்வரென்பதும், இந்நோன்பை மேற்கொள்பவர்கள் வெறுஞ் சோற்றை யுட்கொள்வதைத் தவிர நெய் பால் முதலியவற்றை உட்கொள்ளாரென்பதும் முதலியன, பழைய நூல்களை யாராய்வார்க்கு நன்கு விளங்கும்.

## திருப்பாவையின் தனியன்.

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்தமத்யாபயந்தீ,
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய: ||

(இதன்பொருள்.) யா கோதா - எந்தக்கோதையானவள், ஸ்வ-தன்னாலே, உச்சிஷ்டாயாம்-சாத்திக்கொண்டு கழிக்கப்பட்ட, ஸ்ரஜி-மாலையிலே, நிகளிதம்-கட்டுண்பவனும்,-நீளா-நப்பின்னைப் பிராட்டியினுடைய, துங்க-பருத்துள்ள, ஸ்தந-ஸ்தநமாகிற, கிரி-மலையினுடைய, தட-தாழ்வரையிலே, ஸுப்தம்-தூங்குகின்றவனுமான, க்ருஷ்ணம்-க்ருஷ்ணனை, உத்போத்ய-எழுப்பி,—ஶ்ருதிஶத ஶிரஸ்-பலவான வேதங்களின் அந்தங்களிலே [உபநிஷத்துக்களிலே], ஸித்தம்-ஏற்பட்ட, ஸ்வம்-தனது, பாரார்த்யம் - பாரதந்திரியத்தை, அத்யாபயந்தீ-தெரிவிக்கின்றவளாய்,-பலாத்க்ருத்ய - வலிய, புங்க்தே - அநுபவிக்கிறாளோ: தஸ்யை - அந்தக் கோதையின்பொருட்டு, இதம் இதம் - இவ்விந்த, நம: - வணக்கமானது, பூய:பூய: ஏவ-மீண்டும் மீண்டுமே, அஸ்து-ஆகட்டும்; (என்றவாறு.)

இதனால், திருப்பாவையை யருளிச்செய்த ஸ்ரீ ஆண்டாளைச் சரணம்புக வேண்டிய வகையை எல்லாருமுணர்ந்து அநுசந்திக்கும்படியை, ஸ்ரீபட்டர் அருளிச்செய்தா ரென்க. "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா வாய்திறவாய்", "உம்பர் கோமானே யுறங்கா தெழுந்திராய்" "உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்" என்றவற்றையெல்லாம் திருவுள்ளம்பற்றி, முன்னிரண்டு பாதங்கள் அருளிச்செய்யப்பட்டன. 'நீளா துங்கஸ்தநகிரிதட ஸுப்தம்' என்பது-யசோதை யிளஞ்சிங்கமாகிய ஸ்ரீ கிருஷ்ணன், மலை முழைஞ்சில் சிங்கம் கிடந்து உறங்குவதுபோலவும் பொற்குப்பியின் நுனியிலே கருமாணிக்கத்தை யழுத்திவைத்தாற்போலவும், 'தனத்துள்ளான்' என்றதுபோல நப்பின்னைகொங்கைமேல் உறங்குகின்றானென்றபடி. இவ்வுலகத்திலே சேஷசேஷி பாவத்தை [அடியவனுந் தலைவனுமாகிய சம்பந்தத்தை] யறிந்து நடப்பவ ரில்லாமையாலே அடியவர்களாகிய சேதநர்களைப்போலவே தலைவனாகிய எம்பெருமான் தானும் தன் தலைமையை மறந்துவிட, "உன்தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்" என்று உணர்த்தியதனால், "ஸ்வம் பாரார்த்யம் அத்யாபயந்தீ" என்றார். "இவ்விருள்தருமாஞாலத்திலே எம்பெருமான் தான் சேதநர்களின் ஶேஷத்வத்தை யுணர்த்துவதற்காகப் பல அவதாரங்கள் செய்து பல படியாக முயற்சி செய்தும் அவையாவும் பயனற்றனவாக, இவ்வாண்டாளொருத்தி தனது பாரதந்த்ரியஸ்வரூபத்தைப் பகவானுக்கு உணர்த்தும்படி யாவதே!" என்ற ஈடுபாடு இதில் தோன்றும்.

கோதை - மாலை: மாலைபோலினியவளா யிருந்ததுபற்றிய பெயர்; இது தென்மொழி: இதுவே வடமொழியில் விகாரப்பட்டதென்பர். இனி, வடமொழியாகவே கொண்டு, கோ-வாக்கை, தா-கொடுப்பவள்: எம்பெருமான் விஷயத்திற் பாமாலையைப் பாடிக் கொடுப்பவளென்றும் உரைப்பர் ஒருசாரார். ஆதராதிசயத்தால் 'நம: பூய: ஏவஅஸ்து பூய:' என்றது. (i)

அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

(இ-ள்.) பன்னு-(பலரும் அர்த்தவிசேஷங்களை) ஆராய்ந்து கொண்டாடுகிற, பல் பதியம் - பல [முப்பது] பாசுரங்களையுடையதான, திருப்பாவை-திருப்பாவையென்ற, நற்பாமாலை-பாட்டுக்களினாலாகிய நல்லமாலையை, இன் இசையால் - இனியராகத்தோடு அமைய, அரங்கற்கு - ஸ்ரீ ரங்கநாதன் விஷயமாக, பாடி கொடுத்தாள்-பாடிக் கொடுத்தவளும், பூ மாலை-பலவகைப் புஷ்பங்களையிட்டுத் தொடுத்த மாலையை, சூடி - (தன் முடியிலே) சூட்டிக்கொண்டு, (அதை வடபெருங்கோயிலுடையானுக்குச் சமர்ப்பிக்கும்படி), கொடுத்தாள்-கொடுத்தவளுமான, அன்னம் வயல்-ஹம்ஸபக்ஷிகள் சஞ்சரிக்கிற கழனிகளையுடைய, புதுவை - ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருவவதரித்த, ஆண்டாள் ஐ-ஆண்டாளை, சொல்லு-அநுஸந்திப்பாயாக; (எ-று.)

இதனால், இந்தத் திவ்யபிரபந்தத்தை யநுஸந்திப்பதற்கு முன்னே இதனை யருளிச்செய்த ஆண்டாளின் திருநாமத்தை யநுஸந்திப்பது, மிகவும் அவசியமென்கிறது. இது, நெஞ்சை நோக்கிக் கூறியதாக உய்யக்கொண்டாரா லருளிச்செய்யப்பட்டதென்பர்.

ஆண்டாள் ஸ்ரீ க்ருஷ்ணனைக் குறித்துத் திருப்பாவை பாடியிருக்க, அரங்கற்குப் பாடிக்கொடுத்தா ளென்றது - இருவரு மொருவரே யாதலாலும், பள்ளிகொண்ட பெருமானைத் துயிலெழுப்பினமை பொருந்துமாதலாலும்; "கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் .... அணியரங்கன்" என்று ஸ்ரீ க்ருஷ்ணனையும் ரங்கநாதனையும் அபேதமாகத் திருப்பாணாழ்வாரும் அருளிச்செய்திருத்தல் காண்க. ஆண்டாள் பாமாலை பாடிக்கொடுத்துப் பூமாலையைச் சூடிக்கொடுத்தமை சொன்னது, புஷ்பங்களைக்கொண்டு தொடுத்துச் சமர்ப்பிக்கப்பட்ட மாலை போல, பாக்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட இந்தப் பிரபந்தமும் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு உவப்பைத் தருமென்பதனால்; 'பாமாலை' என்றது. பதியம் - பத்யம் என்பதன் சிதைவு. சூடிக் கொடுத்தாளை யென்ற இடத்தில் உள்ள உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. பன்னு - ஆண்டாளாலருளிச் செய்தவென்று மாம்.

(ii)

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்!—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

(இ-ள்.) சூடி - பூமாலையைச் சூட்டிக்கொண்டு, கொடுத்த - (எம்பெருமானுக்கு) ஸமர்ப்பித்த, சுடர் கொடியே - ஒளி பொருந்திய கொடிபோன்றவளே! தொல் பாவை - (திருவாய்ப்பாடியிடைப் பெண்கள் அநுஷ்டித்த) பழமையான நோன்பை, பாடி - (திருப்பாவை யென்ற பிரபந்தத்தால்) பாடி, அருளவல்ல - (உலகத்தார்க்குக்) கருணையோடு கொடுக்கவல்ல, பல் வளையாய் - பல வளையல்களை யணிந்தவளே! நீ -, - நாடி - (எம்பெருமானிடத்தில்) விருப்பங்கொண்டு, 'வேங்கடவற்கு - திருவேங்கடமுடையானுக்கு (உரியவளாக), என்னை விதி - என்னை வாழ்க்கைப் படுத்துவாயாக,' என்ற - என்று (முன் மன்மதனை நோக்கிச்) சொன்ன, இ மாற்றம் - இந்தச் சொல்லின் பொருளை, நாம் - (உனது அடியவர்களான) நாங்கள், கடவாவண்ணம் - கடந்து போகாதபடி, நல்கு - கருணை செய்வாய்; (எ-று.)

எம்பெருமான் விஷயத்தில் உனக்கு எவ்வளவு அன்புள்ளதோ, அவ்வளவு அன்பு உனது அடியவர்களான எமக்கும் உண்டாகும்படி நீ கருணை செய்யவேணு மென்று ஆண்டாளை நோக்கிப் பிரார்த்தித்ததாகும், இப்பாசுரம். நாச்சியார் திருமொழியில் "அனங்க தேவா! * * * வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" என்றதுகொண்டு, 'வேங்கடவற்கென்னை விதியென்ற இம்மாற்றம்' எனப்பட்டது. தொல் பாவை - பழமையான திருப்பாவையென்ற பிரபந்தத்தை யெனினுமாம்.

மாற்றம் என்ற சொல்லின் பெயர் அதன் பொருளுக்கு ஆனது - சொல்லாகுபெயர். பாவை பாடி - இரண்டாம் வேற்றுமைத்தொகை யாதலின் இயல்பு: "விகாரத்தியல்பு."

இனி, என்ற இம்மாற்றம் - என்ற இந்தச் சொல்லை, நாம் நன்கு உணரும்படி எமக்குக் கிருபை செய்வாயாக என்று உரைத்து, நாச்சியார் திருமொழி யென்று வழங்குகின்ற பிரபந்தம் எமக்கு நன்கு தெரியும்படி அருள்புரிக என்று வேண்டியதாகக் கருத்துக் கொள்வாருமுளர்: அங்ஙனம் கொண்டால், இந்தத் தனியன் - நாச்சியார் திருமொழியின் தனியனுதற்கு ஏற்றதாம்.

இந்தப்பாசுரம் அருளிச்செய்தவர் - இன்னாரென விளங்கவில்லை; இதுவும் - உய்யக்கொண்டா ரருளிச்செய்த தென்பர்.

இதுவும், முந்திய செய்யுளும்—நேரிசை வெண்பா. (iii)

---

நூல்

1. ‡‡மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்*
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!*
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!*
கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்*

---

‡‡ இக்குறியிட்டவை இருமுறை ஸேவிக்கப்படுபவை.

* இந்தக் குறி, ஸேவிக்கும்போது நிறுத்துமிடங்களைக் குறிக்கும்.

ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம் *
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்*
நாரா யணனே நமக்கே பறைதருவான் *
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

(இ - ள்.) நேர் இழையீர் - அழகிய ஆபரணங்களை யணிந்து கொண்டிருப்பவர்களே! சீர் மல்கும் ஆய்ப்பாடி - சிறப்பு நிரம்பிய கோகுலத்திலே யிருக்கிற, செல்வம் சிறுமீர்காள் - நிலையான சம்பத்தையுடைய சிறுமியர்களே! (இந்த நாள்),—மார்கழி திங்கள் - மார்கழி மாதத்திலே, மதி நிறைந்த - சந்திரன் கலை நிரம்பியிருக்கின்ற, நல் நாள் ஆல் - நல்ல நாளாக [சுக்லபட்ச பௌர்ணமியாக] இருக்கின்றது! (இத்தினத்தில்), கூர் வேல் கொடுந் தொழிலன் - கூர்மையான வேலையும் கொடிய தொழிலையு முடைய, நந்தகோபன் - நந்தகோபனது, குமரன் - புத்திரனும்,— ஏர் ஆர்ந்த கண்ணி - அழகு பொருந்திய கண்களையுடைய வளான, யசோதை - யசோதைப் பிராட்டியினது, இளஞ் சிங்கம்- சிங்கக்குட்டி போன்றவனும், கார்மேனி - கறுத்த உடம்பையும், செங் கண் - சிவந்த கண்களையும், கதிர் மதியம் போல் முகத் தான் - சூரியனையுஞ் சந்திரனையுமொத்த முகத்தையு முடைய வனுமான, நாராயணனே - ஸ்ரீமந் நாராயணனே, நமக்கு - (தன் னையே நம்பியிருக்கும்) நமக்கு, பறை தருவான் - (நோன்பிற்கு வேண்டிய) பறையைக் கொடுப்பவனாக ஏற்பட்டிருக்கின்றான்; (ஆதலால்), பாரோர் - (கிருஷ்ணனுடன் இத்தனை நாள் சேர வொட்டாத) இவ்வாய்ப்பாடி இடையர்கள், புகழ - கொண் டாடும்படி, படிந்து - (நோன்பிலே) இறங்கி [நோற்கவுடன்பட்டு], நீர் ஆட - நீராடும்படி, போதுவீர் - வரவேணுமென்ற விருப்ப முள்ளவர்களே! போதுமின் - வாருங்கள்; (எ - று.)—ஓ-அசை.

இதனால், 'திருவாய்ப்பாடியிற் பிறந்த சிறுமியர்களே! வடிவழகையுடைய ஸ்ரீ கிருஷ்ணன் நமது நோன்புக்கு வேண்டு மவற்றைத் தருவானாதலால், நோன்புநோற்க விருப்பமுடைய வர்களெல்லாரும் வாருங்கோள்' என்று திருவாய்ப்பாடியூரில் பஞ்சலட்சங்குடியிலுள்ள கோபகன்னிகைகளிற் சிலர் மற்றைக் கன்னிமார்களை யழைக்கிறார்கள்: திருவாய்ப்பாடிக்குத் தலை வனான நந்தகோபன் வயசு சென்றவனானதனால் அவனது குமார னான ஸ்ரீ க்ருஷ்ணனை நோன்பை முடித்தற்கு வேண்டு மவற்றைச் சம்பாதித்துக் கொடுக்குமவனாக ஏற்படுத்தினரென்க. ஸ்ரீ கிருஷ்ணனுடன் சேரத்தகுந்த காலமாதலால், "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்" என்று மாத பட்ச தினங் களைக் கொண்டாடியும், 1 கிருஷ்ணனுடன் சேரக்கூடாதென்ற

1. மார்கழி மாதத்தில் சத்துவகுணம் தலையெடுத்து நிற்கு மென்பர். கண்ணனும் கீதையில் 'நான் மாதங்களுக்குள் மார் கழி மாதமாய் இருக்கின்றேன்' என்கிறான். தேவர்கட்கு இந்த மாதம் தேவமானத்தால் நமது விடியற்காலைக்குச் சமமாகும். சுக்லபக்ஷம் சத்கர்மங்கள் தொடங்குதற்கேற்ற நற்காலமென்ப.

இடைக்குலத்து முதியவர்களே நமக்கு அநுமதி கொடுத்து நின்றதனால், 'பாரோர் புகழ' என்றும் கூறுகிறார்கள். பார் என்பது - இங்கு, பூமியின் ஏகதேசமாகிய 'ஊர்' என்ற பொருளைத் தந்தது: "மாயோன் மேய காடுறையுலகமும்" என்ற இடத்து உலகமென்பதுபோல. பாரோர் - உலகிலுள்ளாரென்பாருமுளர்.

கதிர் மதியம் போல் முகம் - சூரியனிடத்துள்ள காந்தியையும் சந்திரனிடத்துள்ள குளிர்ச்சியையும் ஒருங்கே கொண்ட முகம். ஆய்ப்பாடிக்குச் சீர் - பால் தயிர் நெய் முதலியவற்றின் வளத்தோடு, உபயவிபூதிநாதனான சருவேசுரன் தனது சௌலப்ய [எளிமை] குணம் பிரகாசிக்கும்படி திருவவதரித்த சிறப்பு. நந்தகோபன் க்ருஷ்ணனுக்கு ஓர் எறும்பினாலேனும் தீங்குவரவொட்டாமற் காக்க வேணுமென்னும் கருத்தினால் வேலைச் சாணைபிடித்துக் கூர்மையாக எப்போதும் வைத்துக் கொண்டுள்ளானென்க. அஞ்சனவண்ணனை நோக்கிக் கண்ணழகுபடைத்தாள் யசோதையென்பது, 'ஏரார்ந்த கண்ணி யசோதை' என்ற இடத்துத் தோன்றும்.1 எம்பெருமானைச் சேர்ந்தவர்கள் பருவம்பாராமல் கௌரவிக்கத்தக்கவரென்பதை உணரும்படி 'முழுகப்போதுவீர்' என்னாது, 'நீராடப்போதுவீர்' என்றது. 'இத்தால் இவர்கள் நினைக்கிறது - க்ருஷ்ண ஸம்ஶ்லேஷம்: தமிழரும் கலவியைச் சுனையாடல் என்றார்கள்'2 என்பது, வ்யாக்யானம். ஆல் - வியப்பிடைச்சொல்.3

பறையென்பது - நோன்புக்கு வேண்டியவற்றில் ஒன்று: இதனை "மாலே மணிவண்ணா" என்ற பாசுரத்தால் அறியலாம். இவ்விடைச்சிறுமியர்கள் நோன்பு நோற்பதைத் தாம் ஒரு வியாஜமாகக்கொண்டு பேசுகின்றனரேயன்றி ஸ்ரீ க்ருஷ்ண

---

1. "அழுகையும் அஞ்சிநோக்குமந்நோக்கும் தொழுகையும் இவைகண்ட கண்ணிதே"

2. தமிழ்ப் புலவர்க்குள்ளே நிலவும் பாடல்சான்றபுலனெறி வழக்கத்தின்படி 'சுனையாடல்' 'புனலாடல்' போன்ற தொடர்களைக் 'கலவி' என்றதைக் குறிக்குமாறு பிரயோகிப்பர். ஆண்டாளும் நல்லிசைப்புலமை மெல்லியலாராதலின், அந்தப் புலனெறி வழக்கத்தையொட்டி 'நீராட' என்றாள். இவ்வழக்கினை 'நின்வெங்காதலி தழீஇநெருநை, ஆடினையென்பபுனலே' (ஐங்குறு: 71) "திருநீர்க்குமரியாட" [சிந்தாமணி: சுரமஞ்சரி, செ. 5] 'நும்வரைக்குமரி யெய்தியினிதாட' [கந்தபுராணம்—வள்ளி: செ. 97], 'கன்னியைக் கண்ணுற்றுநீராட வந்தனம்' (வில்லிபா: அருச்சுனன்தீர்த்த: செ. 22), 'பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்' (திருநெடுந்: செ. 19) என்றவிடங்களிலும் காண்க.

3. இப்படி விலக்ஷணமானதொருகாலம் நேர்பட்டதென்னே! என்றவியப்பு. ஈண்டு இராமபிரான் வரவு நோக்கியிருந்த அகத்தியர் 'உறப்பெறுவனால்' 'உரைக்குதவுமால்' என வியந்து அக்காலத்தைக் கொண்டாடியமை ஒப்புநோக்குக.

னுக்கு அடிமை செய்வதையே அந்தரங்கமாகக் கொண்டுள்ளா ரென்பது, "சிற்றஞ்சிறுகாலே" என்ற பாசுரத்தில் 'இற்றைப் பறைகொள்வானன்று காண் கோவிந்தா! எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கே நாமாட் செய்வோம்' என்ற இடத்தில் தெளிவாக விளங்கும். நாரா யணன் - நித்திய வஸ்துக்களின் திரளுக்கு ஆதாரமாக இருப்பவ னென்றும், நித்தியவஸ்துக்களின் திரளைத் தனக்கு இருப்பிட மாக வுடையவனென்றும் பொருள்படும். ஏ - சிறப்பு: அசை யுமாம்.[1]

ஏலோரெம்பாவாய் என்பது - அடிநிறைக்க வந்த சொற் றொடர். இனி, ஏல் - இப்படியானால், எம்பாவு ஆய் - எமது கருத்துக்கு இசைந்து, நாராயணனே பறைதருவான்: ஓர் - (இதனை) ஆராய்வாய் என்றுவது; ஏல்எம்பாவாய் - ஓ எமது இரதிதேவியே! ஓர் - (இதனை) விசாரித்துக்கொள் என்றுவது பொருள்கொள்ள வழியுண்டு என்பர்: இவ்வாறான பொருள் எல்லாவிடத்தும் பொருந்திவராதாகையால், பாதபூரணத்துக் காக வந்ததென்று கொள்வதே தகுதி. பாவையென்ற பிரபந் தத்து ஒவ்வொரு செய்யுளீற்றிலும் இவ்வாறு வருவது மரபு: ஆகையால், இத்தொடரை அடுத்த பாசுரம் முதல் பதவுரை யெழுதுமாறு எடுத்துக்கொள்ளவில்லை.

இப்பாசுரத்தி னுள்ளுறை பொருள் :—சற்குருவினருளினாலே பகவானுடைய அங்கீகாரத்துக்குக் காரணமான சத்துவகுணம் மிகுந்த காலம் நேர்ந்துள்ளது; இப்படிப்பட்ட காலத்திலே, ஜ்ஞாநபக்தி வைராக்கியங்களை யடைந்து பகவானைத் தவிர மற் றைப் பொருள்களை விட்டிருப்பவர்களே! மங்களாஸாஸநபரனை ஆசார்யனுக்கு வசப்பட்டும் திருமந்த்ரத்தில் தனது ஸர்வகார ணத்வம் தோன்றும்படியு மிருப்பவனாய், ஆச்ரயிப்பதற்கு ஏற்ற வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்யஸௌலப்ய குணங்களும் ஆஸ்ரிதரின் காரியத்தை நிறைவேற்றுதற்கு ஏற்ற ஜ்ஞாநஸக்தி ப்ராப்தி பூர்த்திகளாகிற குணங்களு முடையவனான ஸ்ரீமந்நாரா யணனே தன்னைத்தவிர வேறொன்றை உபாயமாகக் கொள்ளாத நம்முடைய அபேட்சிதமான கைங்கர்யத்தை நிறைவேற்று விப்பானாதலால், பகவத்கைங்கர்யத்தில் விருப்பமுள்ளவர்க ளெல்லாரும் வாருங்கோ ளென்பது.

இப்பிரபந்தத்துப் பாசுரங்கள் முப்பதும் - பெரும்பாலும் வெண்டளையால் வந்த எட்டடி நாற்சீர் ஒருவிகற்பக் கொச்சகக் கலிப்பா. (1)

2. வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்கு*
செய்யும் கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி *
நெய்யுண்ணோம் பாலுண்ணோம்*நாட்காலே நீராடி *

---

1. நாராயணனே, ஏ-பிரிநிலை; தேற்றமுமாம். நமக்கே, ஏ-பிரிநிலை.

மையிட் டெழுதோம் மலரிட்டு நாமுடியோம் *
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்*
ஐயமும் பிச்சையு மாந்தனையும் கைகாட்டி *
உய்யுமா றெண்ணி யுகந்தேலோ ரெம்பாவாய்.

(இ - ள்.) வையத்து வாழ்வீர்காள் - (ஸ்ரீக்ருஷ்ணன் திருவவதரித்த) பூமியிலே (இக்காலத்திலே பிறக்கும்) பாக்கியத்தைப் பெற்ற பெண்களே! நாமும் - ('அவனாலேதான் நமக்குப் புருஷார்த்தம் கைகூடும்' என்றிருக்கிற) நாமும், உய்யும் ஆறு - உஜ்ஜீவிக்கும் [உய்யும்] வகையை, எண்ணி - ஆலோசித்து, உகந்து - உவப்புக்கொண்டு, நம் பாவைக்கு - நம்முடைய நோன்புக்கு, செய்யும் - செய்யப்போகின்ற, கிரிசைகள் - காரியங்களை, கேளீர் - கேட்பீராக :—(அவை எவையெனில்,—) நாம் - நாங்கள், பாற்கடலுள் - திருப்பாற்கடலில், பைய துயின்ற - மெல்லத் தூங்குகிற [யோகநித்திரை செய்கிற], பரமன் - (குணங்களால்) யாவரினுஞ் சிறந்த பெருமானின், அடி - திருவடிகளை, பாடி - (புகழ்ந்து) பாடி, நாள் காலை நீர் ஆடி - விடியற்காலத்திலேயே மூழ்கி,—ஐயமும் - தானத்தையும், பிச்சையும் - பிட்சையையும், ஆம் தனையும் - (இரப்பவர்) திருப்தியடைந்தவராகுமளவும், கை காட்டி - (நாம் கொடுத்தோமென்ற) அபிமானமில்லாமற் கொடுத்து,— நெய் உண்ணோம் - நெய் குடியோம்; பால் உண்ணோம் - பாலையுங் குடியோம்; மை இட்டு எழுதோம் - (கண்களை) மையிட்டு அலங்கரிக்கமாட்டோம்; மலர் இட்டு முடியோம் - (கூந்தலைப்) புஷ்பங்கொண்டு முடிக்கமாட்டோம்; செய்யாதன செய்யோம் - (முன்னோர்) செய்யாத காரியங்களைச் செய்யமாட்டோம்; தீ குறளை சென்று ஓதோம் - (பிறர்க்குத்) தீமையுண்டாக்குந் தன்மையுள்ள கோட் சொற்களை (ஸ்ரீ க்ருஷ்ணனிடத்து)ப்போய்ச் சொல்லமாட்டோம்; (எ-று.) - நாட்காலே என்றும் ஓதுவர்.

இதனால், நோன்பு நோற்கின்ற தாங்கள் மேற்கொண்டுள்ள நியமங்களைச் சொல்லுகிறார்கள். இவர்கள் மேற்கொண்டுள்ள நியமங்களுள் ப்ரவ்ருத்தி ரூபமானவை - நாட்காலை நீராடுதல், பரமனடி பாடுதல், ஐயமும் பிச்சையும் ஆந்தனையுங் கைகாட்டுதல் என்பன; நிவ்ருத்தி ரூபமானவை - நெய்பாலுண்ணாமை, மையிட்டெழுதாமை, மலர் முடியாமை, செய்யாதன செய்யாமை, தீக்குறளை ஓதாமை யென்பன. தீக்குறளை சென்றோதோம்- 'பேய்ப்பெண், நாயகப்பெண்' என்று நமக்குள் சொல்லிக்கொள்ளும் நிஷ்டூரமான சொற்களை க்ருஷ்ணன் செவிப்படச் சொல்லமாட்டோமென்று கருத்துக்கூறுவர்.1 காத்யாயநீவ்ரதத்தில் வெறுஞ்சோறு தவிர வேறு ஒன்றும் உண்ணவில்லையென்று ஸ்ரீ பாகவதத்திற் கூறியிருப்பதற்கு ஏற்ப, 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்று இங்குக் கூறியது என்க.

ஸ்ரீ க்ருஷ்ணன் பிறந்த காலத்தில் அவ்வூரிலே பிறந்து அவனை யநுபவித்தற்குத் தக்க பருவம் இடைக்கன்னியரெல்

1. 'குறளை' என்றது ஏனைய பொய், வன்சொல், பயனில் சொல் என்றவற்றிற்கும் உபலட்சணம்.

லார்க்கும் ஒத்திருக்க, பிறரை 'வாழ்வீர்காள்!' என்பது - தாம் தனியே யநுபவியாமல் பிறருடன் சேர்ந்து அநுபவிக்கும்போதே அநுபவத்தினினிமை தோன்றுதலால், அப்படிப்பட்ட அநுபவத்திற்குக் காரணமா யிருப்பவர்களைக் கொண்டாடிச் சொல்லுங் கருத்தினாலென்க. 'பெண்களைக் கிருஷ்ணனோடு சேரவொட்டோமென்றிருக்கிற ஊரிலே கிருஷ்ணாநுபவத்துக்கு இத்தனை பேர் உண்டாவதே!' என்ற மகிழ்ச்சியினாலே மெய்ம்மறந்திருப்போரை நோக்கி, 'கேளீரோ' என்று சொல்ல வேண்டிற்று. 'ஸ்ரீ க்ருஷ்ணன் பேரைச்சொல்லிப் பாடினால் முன்பு கிருஷ்ணனை யநுபவிக்கவொட்டாமல் தடுத்த இடைச்சாதிக் கிழவர்கள் ஒருவேளை மீண்டுந் தடுப்பார்களோ!' என்ற அச்சமுள்ளதனால், அந்தக் கிருஷ்ணாவதாரத்துக்கு மூலமான பாற்கடலுள் துயின்ற பரமனைப் பாடுவோ மென்கிறார்கள். ஐயம் - சத்பாத்திரத்தில் வேண்டுமளவு மிகுதியாகக் கொடுத்தல்- பிச்சை - பிரமசாரியர்கட்கும் ஸந்யாஸிகட்குங் கொடுப்பது. பிச்சை=பிக்ஷா: வடசொல். ஆந்தனையும் - இயன்ற வரையிலு மென்றுமாம்.

வையம்-உலகத்தின் ஏகதேசத்தை யுணர்த்திற்று; "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற தொல்காப்பியத்திற் போல. கிரிசை=க்ரியா. 'உண்' என்பது நால்வகையான உணவுத்தொழிலுக்கும் பொதுவாக வருதலும் மரபு ஆதலால், 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்றார். 'உண்ணோம்' என்பதை ஜாதிப்பேச்சு என்று அருளிச்செய்து, 'நெய் பால்கள் உண்பனவா? குடிப்பனவா?' என்றுகூடத் தெரியவொண்ணாதபடி க்ருஷ்ணன் அவைகளைக் களவுகாண்கையாலே இவ்வாறு கூறியதென்று ரஸோக்தியாக [சுவைபட] அருளிச்செய்வர், வ்யாக்யாதா.

உள்ளுறை:- இருள்தருமா ஞாலமான இந்த வுலகத்திலே பிறந்தும் பகவதநுபவத்தைப் பெற்று வாழ்பவர்களே! நாங்கள் மேற்கொண்டு ஒழுகுகின்ற [அநுஷ்டிக்கிற] பிரபத்திக்கு உறுப்பானவற்றைச் சொல்லுகிறோம்; கேளுங்கள். நாங்கள் உஜ்ஜீவிக்கும் வகையைச் சிந்தித்து மகிழ்ந்து பகவானையே போக்ய [போக்யம்-அநுபவிக்கத்தக்கது] மாகக்கொண்டு போக்யாந்தரங்களைத் தவிர்ந்து, பகவத்கைங்கர்யமாக வர்ணாச்ரமங்களுக்குத் தக்க கர்மங்களைச் செய்துகொண்டும், ஶாஸ்த்ரங்கள் விதித்தாலும் பூர்வர்களநுஷ்டியாதபடியினால் ஜ்ஞானபக்தியோகங்களைக் கொள்ளாமலும், பிறர்க்கும் அவற்றை யுபதேசியாமலும், தெரிந்த வரையிலும் பகவத் பாகவத வைபவங்களைச் சிறிதுங் கர்வமில்லாது பேசுவோ மென்பதாம். மையிட்டெழுதுதல்- ஜ்ஞான யோகம். மலரிட்டு முடிதல்-பக்தியோகம். ஐயம்-பகவத் வைபவம். பிச்சை-அணுபரிமாணர்களான பாகவதரின் வைபவம்.

3. ‡‡ஓங்கி யுலகளந்த வுத்தமன் பேர்பாடி*
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால் *
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து*
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகள *

பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப *
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்க * குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள் *
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) ஓங்கி-(திரிவிக்கிரமனாய்) உயர வளர்ந்து, உலகு அளந்த-லோகங்களை (மூன்றடியால்) அளந்து கொண்ட, உத்தமன்-புருஷோத்தமனுடைய, பேர் - திருநாமங்களை, நாங்கள்-(இடைச்சாதிக் கன்னிகைகளாகிய) நாங்கள், பாடி-(அன்புடன்) இசைபாடி, நம் பாவைக்கு சாற்றி - நாங்கள் தொடங்கியுள்ள இந்நோன்புக்கு அங்கமென்று சொல்லி, நீர் ஆடினால்-ஸ்நானஞ் செய்தால், - (அதன் பயனாக), - நாடு எல்லாம் - தேசம் முழுவதும், தீங்கு இன்றி-ஒரு தீங்குமில்லாதபடியாக, திங்கள் மும்மாரி பெய்து-மாதம் மூன்றுமழைபொழிய,(அதனால்), ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடு கயல் உகள-உயரவளர்ந்த பருத்த செந்நெற்பயிர்களின் நடுவில் கயல்மீன்கள் (களிப்பினால்) துள்ளவும்,-பூங்குவளை போதில்-அழகிய குவளைமலர்களில், பொறி வண்டு கண்படுப்ப-புள்ளிகளையுடைய வண்டுகள் (இனிது) தூங்கவும்,-நீங்காத செல்வம் நிறைந்து-குறையாத செல்வம் நிறையும்படி, வள்ளல் பெரும் பசுக்கள்-வள்ளல்தன்மையுடைய பெரிய பசுக்கள், தேங்காதே-ஏங்காமல், புக்கு-(கறப்பதாகப்) புகுந்து, இருந்து-நிலையாயிருந்து, சீர்த்த முலை பற்றி வாங்க-பருத்த முலைகளை யணைத்து இழுக்க, குடம்-(கறக்கக்கொண்டு போன)குடங்களை யெல்லாம், நிறைக்கும்-நிறைத்துவிடும்;(எ-று.)

இதனால், வேறொரு பிரயோஜநத்தைக் கருதாமல் பகவந்நாம ஸங்கீர்த்தநத்தை ஸ்வயம்ப்ரயோஜநமாகக் கருதுகின்ற நாங்கள் நோன்புக்கு அங்கமாகப் புருஷோத்தமனது பேரைச் சொல்லி விடியற்காலத்தில் மூழ்கினால், அதன் பயனாக, இப்போதுள்ள க்ஷாமமும் வியாதியும் நீங்கி, நாடு முழுவதும் மாதம் மும்மாரி[1] பெய்யும்: அதனால், செந்நெற் பயிர்கள் ஓங்கி வளர, நீரின்மிகுதியாற் களித்து அப்பயிர்களினிடையே வாளைமீன்கள் துள்ளும்: நீர்ப் பூக்கள் மலர்ந்திருத்தலால், அவற்றினிடையே மதுபானஞ் செய்த வண்டுகள் இனிது தூங்கும்: நல்ல மேய்ச்சல் கிடைத்தலால், பசுக்கள் நடக்கும் பெருஞ்செல்வமுண்டாகப் பாலை மிகுதியாகக் கறக்குமென்பதாம். வேண்டியபோதெல்லாம் சிறு பிள்ளைகளும் கறக்கலாம்படி பாலை மிகக்கொடுத்தலால், 'வள்ளல் பசுக்கள்'

---

1 மும்மாரி:-"மாடு புனைந்தசீர் மன்னவர் நெறியினன் முன்னவர் தவத்தாற்றையும், தொடி மடந்தையர் கற்பினன் மதிதொறுஞ் சொரிதரும் மும்மாரி" என்று இங்ஙனம் கூறும் மரபு காணப்பட, 'நாங்கள் நம் பாவைக்குச்சாற்றி நீராடினால் திங்கள் மும்மாரி பெய்யும்' என்றது என்னையெனில், பாவை நோன்பின் பயனாக நாடு செழித்தலோடு அரசியல்நெறி, முன்னவர் தவம், மடந்தையர் கற்பு என்ற மூன்றும் தலைக்கட்டும் என்பதும் பெற்றாம். மும்மாரி-ஒன்பது நாள் வெயிலும் ஒருநாள் மழையுமாய என்றபடி.

எனப்பட்டது. வள்ளல் தன்மை-வேண்டுவார்க்கு வேண்டியதை மாறுமற் கொடுக்குந் தன்மை. முதற் பாசுரத்தில் "நாராயணன்" என்று உபயவிபூதியையுடைய பரமபதநாதனைச் சொல்லி, இரண்டாம் பாசுரத்தில் "பாற்கடலுள்பையத்துயின்றபரமன்" என்று பாற்கடலிற் பள்ளிகொண்டுள்ள வியூகமூர்த்தியைச் சொல்லி, இப்பாசுரத்தில் விபவமூர்த்தியைச் சொல்லுகின்றூர்களென்க. ஸ்ரீ கிருஷ்ணுவதாரத்தோடு வடிவழகு முதலியவற்றி லொத்திருத்தலால், வாமனுவதாரத்தை யருளிச் செய்தது. வாமனுயிருந்த திருமால் கிருபையினுலே திரிவிக்கிரமனுக மாறியதனுல், இதுவும் அந்தப் பகவானுக்குமேன்மையை யுண்டாக்குவதல்லது, உலகத்தவரின் சரீரத்தைப்போலத் தாழ்ச்சியை யுண்டாக்கா தென்பதற்காக 'ஓங்கியுலகளந்த உத்தமன்' என்றது.1 பாவைக்குச் சாற்றி-நோன்பு நோற்கைக்கென்று ஒருவியாஜத்தைச் சொல்லி யென்றுமாம். 'தேங்காதே' என்பதில், கறப்பதன் அருமை தெளிவியாம். வாங்க-(ஒருமுறை முலைக்காம்பை யிழுத்துவிட்டுக்) கை வாங்கினமாத்திரத்தில் என்றுமாம்.

உள்ளுறை:-அநந்யப்ரயோஜநரான நாங்கள் திருமந்த்ரத்தைக் கூறுதலால் தேசம் முழுவதும் தேஹாத்மாபிமாநம் முதலிய தோஷம் நீங்கி, அநந்யார்ஹஶேஷத்வ அநந்யஶரணத்வ அநந்யபோக்யத்வங்க ளாகிற மூன்றுதன்மையுமுண்டாய், ஒருருக்கு ஒருத்தரேபோது மென்னும்படி யிருக்கிற ஜ்ஞாநவான்களைச் சேர்ந்து ஆத்மவர்க்கங்கள் களிக்க, அந்தஜ்ஞாநிகளின் ஹ்ருதய புண்டரீகத்தில் ஸ்ரீமந்நாராயணன் பிராட்டியோடும் இனிது வந்து சேர, உறுதியான மனத்துடன் தம்மைப் பிரார்த்திக்குஞ் சிஷ்யர்க்குப் பரிபூர்ணமான ஜ்ஞாநத்தைக் கொடுத்துப் பகவத்குணங்களை யநுபவிப்பித்துப் புஷ்டராக்கும் ஆசார்யஸம்ருத்தி யுண்டாகுமென்பதாம். (3)

4\. ஆழி மழைக்கண்ணு! ஒன்றுநீ கைகரவேல் *
ஆழியுள் புக்கு முகந்துகொடார்த்தேறி *
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்து *
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில் *

1\. உத்தமன் - ஒரு பயனும் எதிர்பாராது உதவுபவன் உத்தமன். இத்தகைய உத்தம அதிகாரி உலகளந்த திருமால் என்றபடி. எங்ஙனெனில், இருந்ததே குடியாக எல்லோர் தலையிலும் ஊறெண்ணெய் வார்த்தாற்போலே திருவடிகளைக் குளிரவைத்தானன்றோ! இது பற்றியன்றே அழகர் கலம்பகத்திலும், "கொண்டல்வண்ணு! அன்றே உன் றுரைகழற்கமலம் பெற்றேன், மண்டலம் அளந்த காலை மற்று நான் புறம்போ சொல்லாய்" என்றதும். "உறங்குகின்ற பிரஜையை அணைத்துக்கொண்டுகிடக்கும் மாதாவைப்போல் இவற்றேட்டை ஸ்பர்ஶந்தனக்குத் தான் உகக்கிருனிறே" என்றனர் பெரியவாச்சான்பிள்ளை.

'பேர்பாடி' என்றவிடத்து, 'கட்டிப் பொன்போலே அவன்; பணிபொன் போலே திருநாமம்' என்றது நினைக.

ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து *
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் *
வாழ வுலகினிற் பெய்திடாய்* நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) ஆழி-சமுத்திரம்போல் கம்பீரமாயிருக்கிற, மழை கண்ணு-மழைக்குநிர்வாஹகனே! நீ—, ஒன்றும் கைகரவேல் - சிறிதும் (மழைபொழியாமல்) ஒளிக்காதே; ஆழியுள் புக்கு முகந்து கொடு-சமுத்திரத்தினுள்ளேபுகுந்து மொண்டுகொண்டு, ஆர்த்து - முழங்கி, ஏறி - (ஆகாயத்திலே) ஏறி, ஊழி முதல்வன் உருவம் போல்- (ஸ்ருஷ்டிகாலத்திலே எல்லாவற்றுக்குங்) காரணனை எம்பெருமானது உருவத்தைப்போல, மெய் கறுத்து - உடம்பு கறுத்துத் தோன்றி, - பாழிஅம் தோள் உடை பற்பநா பன்-வலிமையுள்ள அழகிய தோள்களையுடைய பற்பநாபனது, கையில்-திருக்கையிலுள்ள, ஆழிபோல்-சக்கரம்போல, மின்னி—, வலம்புரி போல் - (அப்பெருமான் கையிலுள்ள) வலம்புரிச்சங்கு போல,நின்று அதிர்ந்து-நிலையாக இடித்து, சார்ங்கம் உதைத்த- (அப்பெருமான் திருக்கையிலுள்ள) சார்ங்கமென்னும்வில் பொழிந்த, சரம்மழை போல்-பாணவர்ஷத்தைப் போல், வாழ-(எல்லார்க்கும்)வாழ்வு உண்டாகவும், நாங்கள் மகிழ்ந்து மார்கழி நீர் ஆட உம்-நாங்கள் மகிழ்ச்சியடைந்து மார்கழிநீராடலைச் செய்யவும், தாழாதே-தாமதியாமல், உலகினில்--, பெய்திடாய்-பொழிவாயாக.

இதனால், ஆயர்சிறுமியர் தாம் நோன்புநோற்றால் விளையக் கூடிய நன்மைகளை எண்ணமிட்டுச் சொல்லிக்கொண்டிருக்கையில் மழைக்குஉரிய கடவுள் 'பகவானிடத்துப் பக்தைகளான இவர்கட்கு நம்மாற் கூடியஉதவியைச் செய்யவேணும்' என்று இவர்கள் முன்னே வந்து தன்னைத் தெரிவித்து இவர்களுடைய கட்டளையை எதிர்பார்த்துநிற்க, இவ்விடைச்சிறுமியர் 'மழைக்குஉரிய தேவதையே! நீ சிறிதும் மழைபொழிவதற்குப் பின்வாங்காமல், சமுத்திரத்தின் நடுவிலே தரையண்ணளவும் புகுந்து அங்குள்ள ஜலம் முழுவதையும் முகந்து, அங்கு நின்றும் வானத்தின்மீதேறி, எம்பெருமானது திருவுருப்போற் கறுத்து, அப்பிரான் திருக்கையிலுள்ள திருச்சக்கரம்போல் மின்னி, திருச்சங்கம்போல் இடைவிடாமல் அநுகூலர் களிக்கும்படி யிடித்து, அப்பிரானது திருக்கையிலுள்ள திருச்சார்ங்கம் பிரதிகூலர்மாண்டு அநுகூலர் செழிக்கச் சரமழைபொழிவதுபோலவே பிரதிகூலங்களான வியாதி துர்ப்பிட்சம் முதலியன நீங்கி அநுகூலர் மனம் மகிழப் புனல்மழை பொழிவாயாக' என்று கட்டளையிடுகின்றனர். சமுத்திரத்தினின்றுமே பெரும்பான்மையான ஜலம் மேகத்திற்குவருவதால், மேகம் சமுத்திரத்திற்போய் ஜலத்தைத முகந்துகொண்டு வானத்தின் மேலேறிப்பொழியுமெனக் கூறுதல், கவிசமயம். தலைவனைச் சார்ந்த பொருள்களை உபமானமாக்கிக் கூறுதலும்-ஒருவகையுவமை.1 ஆழிமழைக்

1 இந்த உவமைநயம் சாலவழகிது. 'உருவம்போல் மெய் கறுத்து' என்றவிடத்து மெய்யுவமையும் உருவுவமையும்; 'ஆழி போல்மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து' என்றவிடத்து

கண்ணு-'ஆழி' என்று மண்டலமாய், இப்பூமண்டலமெல்லாம் பெய்யும் மழைக்கு நிர்வாஹகனே! என்றுமாம். இனி, இந்தப் பாசுரத்திற்கு-நாங்களும் மார்கழிநீராட-மிகச்சிறிய பெண்களான நாங்களும் (மழைபெய்யும் பொருட்டு) மார்கழி நீராடிநோற் பதனுல், மழைக்கண்ணு! வாழப் பெய்திடாய் என்கிறார்களென்று பொருள்கூறலுமாம். சிறுபெண்களாதலால் மழைத்தேவன் பெயரையறியாமையாலேனும், தொழிலையிட்டுக் கூப்பிட்டால் மனமுவப்பா னென்ற எண்ணத்தினுலேனும், பெயரைச் சொல்லிக்கூப்பிடாது தொழிலையிட்டு 'ஆழிமழைக் கண்ணு!' என்கின்றனர். சார்ங்கம்-திருமாலின் வில்லுக்குப் பெயர். அநுகூலர் பிரதிகூலர் என்று பாராமல் எங்கும் ஒரேரீதியாக வாழ்ச்சியடையும்படி யென்று 'சார்ங்க முதைத்த சரமழைபோல் வாழ' என்பதற்குக் கருத்துக்கூறலாம். பற்பநாபன் - (பிரமன் தோன்றிய) தாமரைமலரை நாபி [நாபி-உந்தி, கொப்பூழ்] யிலுடையவன்: தாமரைமலர் போன்ற நாபியை யுடையவனென்றுமாம். அதிர்ந்து ஆர்த்து-அதிர்ச்சியுண்டாக முழங்கியெனினுமாம்.

பகவானது குணங்களாகிற சமுத்திரத்தை நன்றாகவநுபவித்து ஆசார்யபதவியைக் கைக்கொண்டு, எம்பெருமானது காருண்ய குணத்தை யநுபவிப்பதனுலும் எம்பெருமானைப் பிரதியக்ஷமாக வுணர்ந்ததனுலும் திருமேனியில் வேறுபாட்டையும் காந்தியையுமடைந்து எம்பெருமானது திருவருளை நன்ருக வறிந்த முதலாழ்வார்கள் எம்பெருமானுர் போன்ற ஆசார்யரை நோக்கி, 'எல்லாரு மறியும்படி பிரணவார்த்தத்தைச் சொல்லி, அதன்மூலமாக எம்பெருமானது காருண்ய குணத்தை எல்லாரு மறிந்து உஜ்ஜீவிக்கும்படி வெளியிடவேணும்' என்று பிரார்த்திப்பதாக இப்பாசுரத்திற்கு உள்ளுறை காண்க. (4)

5. மாயனை மன்னு வடமதுரை மைந்தனை *
தூய பெருநீர் யமுனைத் துறைவனை *
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை *
தாயைக் குடல்விளக்கஞ் செய்ததா மோதரனை *
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது *
வாயினுற் பாடி மனத்தினுற் சிந்திக்க *
போய பிழையும் புகுதருவான் நின்றனவும் *
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

---

வினையுவமையும், 'சரமழைபோல்' என்றவிடத்துப் பயனுவமையும் உட்கிடையாகக் கொண்டிருத்தல் உய்த்துணரற்பாற்று. இங்கு மழைக்கண்ணனை ஊழிமுதல்வனைப் போல் மெய்யெடுக்கவும், உருக்கொள்ளவும், வினைசெய்யவும், பயன் விளைக்கவும் வேண்டுகின்றனள் ஆண்டாள். இங்ஙன், தொல்காப்பியனுர் கூறியருளிய அணிகளுக்கு நாயகமாயிலங்கும் உவமையணியை ஆண்டாள் பிரயோகித்திருக்குந்திறன் மெச்சத்தக்கது. "வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே, வகைபெற வந்த வுவமைத் தோற்றம்" என்றது சூத்திரம்.

(இ - ள்.) நாம் - நாங்கள், தூயோம் ஆய் வந்து - சுத்தியை யுடையவர்களாய் வந்து, (ஸ்ரீக்ருஷ்ணனை), தூமலர் தூவி - பரிசுத்தமான புஷ்பங்களை முறைகெட இட்டு, தொழுது - அஞ்சலி செய்து, வாயினால் பாடி - வாயினாற் பாடிக்கொண்டு, மனத்தினால் சிந்திக்க - நெஞ்சினாலே நினைத்தால், போய பிழையும் - முன்னே செய்த பாபங்களும், புகுதருவான் நின்றனவும் - (இனிமேல்) வராநின்ற பாபங்களும், தீயினில் தூசு ஆகும் - நெருப்பிலிட்ட பஞ்சு போலத் தீய்ந்துவிடும்; (ஆதலால்), மாயனை - ஆச்சரியமானவனும், மன்னு வடமதுரை மைந்தனை - (எம்பெருமானது சம்பந்தம்) எப்போது மிருக்கின்ற வடமதுரையி லவதரித்த வலிமை அழகு முதலியவற்றை யுடையவனும், தூய பெருநீர் யமுனை துறைவனை - பரிசுத்தமான மிக்க ஜலத்தையுடைய யமுனாநதியின் துறையை யுடையவனும், ஆயர் குலத்தினில் தோன்றும் - இடையர் குலத்திலே தோன்றிய, அணி விளக்கை - பிரகாசமான விளக்குப் போல்பவனும், தாயை குடல் விளக்கம் செய்த - மாதாவின் வயிற்றுக்கு மேன்மையை யுண்டாக்கின, தாமோதரனை - தாமோதரனுமாகிய எம்பெருமானை, செப்பு - சொல்வாயாக ; (எ - று.)

இப்பாசுரத்தில், 'நாம் நோன்பிலே யிழிந்தால் நம்முடைய இஷ்டம்நிறைவேறும் என்று உறுதியாய்க்கொள்வது எதனால்?' என்றுஒருத்தி சங்கிக்க, 'நாம் நோன்பை யநுஷ்டித்துப்பகவானை த்ரிகரணங்களினாலும் கொண்டாடினால், நமது இஷ்டம் நிறைவேறுவதற்குப் பகையான பாபங்களெல்லாம் தாமே நீங்கும்' என்று மற்றொருத்தி சொல்லுகின்றனள். 1 'மாயன்' என்றது ஒருநாடாகத் தன்னை யநுபவிக்கும்படி கொடுத்துள்ள பரமபத நாதனது குணத்தை நினைத்தாதல், அவதாரத்திலுள்ள சீல குணத்தை நினைத்தாதல் கூறியது. வாமனாவதாரஞ் செய்த சித்தாச்ரம மாதலாலும், சத்ருக்நாழ்வான் லவணாசுரனைக் கொன்று அரசாண்ட இடமாதலாலும், ஸ்ரீக்ருஷ்ணன் திருவவதரித்த ஸ்தலமாதலாலும் 'மன்னுவடமதுரை' எனப்பட்டது. தான் ஆழமுடையதாயிருந்தும் பிறந்தவுடனே ஸ்ரீகிருஷ்ணனை எடுத்துக்கொண்டு வசுதேவ ரெழுந்தருளினபோது முழந்தாளளவாய்நின்று வழிவிட்டதனாலும், கிருஷ்ணனும் கோபிமார்களுமிருந்து திளைக்குமிட மாதலாலும் 'தூயபெருநீர்யமுனை' என்றும், பரமபதத்திற் பிரகாசியாத சீலகுணம் மிகவும் பிரகாசிப்பது இவ்வவதாரத்திலே யாதலாலும், க்ஷத்ரியனாய்ப் பிறந்திருந்தும் உலகத்தார் முதன்முதலிலறிந்தது திருவாய்ப்பாடியிற் பிறப்பே யாதலாலும் 'ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை' என்றும், யசோதையினிடத்துத் தான் கட்டுண்டிருந்து 'இவ்வளவு அடங்கிய குழந்தையை எவ்வாறு இவள் பெற்றனளோ?' என்று, உலகத்தார் கொண்டாடுகின்ற புகழ் அவ் யசோதைக்கு உண்டாகும்படி செய்ததனால் 'தாயைக் குடல்விளக்கஞ் செய்த 2

1. இங்ஙனம் பாவம் அருளிச்செய்தது, 'செப்பு' என்ற சொல்லாற்றலால்.

2. குடல் விளக்கஞ் செய்தல் - நாட்டார் புகழ்ச்சியாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டங்கட்டுதல்.

தாமோதரனை' என்றும், இருந்தநிலையிலேயே எம்பெருமானைக் கிட்டுகை பரிசுத்திகரமாதலால் 'தூயோமாய்' என்றும் கூறினர். தாம + உதரன் = தாமோதரன்: யசோதை கட்டிய கயிற்றுத் தழும்பை வயிற்றிலுடையவன். தூமலர் - பிரயோஜநத்தைக் கருதி இடப்படாத மலர். மணிவிளக்கை என்று பிரித்தல், மோனைத் தொடைக்குச் சிறவாது.

போயபிழை - பூர்வாகங்கள்: [பூர்வ + அகம்; அகம் - பாவம்] எம்பெருமானைக் கிட்டுவதற்கு முன்னே புத்திபூர்வமாகச் செய்த பாவங்கள். புகுதருவான் நின்றன-உத்தராகங்கள்: பகவானை யாச்சிரயித்தபின்பு அபுத்திபூர்வகமாக நேரும்பாவங்கள். போயபிழையும் * * * தீயினில் தூசாகும் - "யதைஷீகதூலம் அக்நௌ ப்ரோதம்ப்ரதூயேத, ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே."

ஆயர்குலம் - உள்ளுறையில் ஸாதநாந்தரமில்லாத பாகவத குலம். அநந்யப்ரயோஜநராய்ப் பகவானையே யுபாயமாகப் பற்றிய நாம் உபேயத்தினிடத்திலுள்ள விருப்பத்தின் மிகுதியால் இருந்தவிடத்தைவிட்டுப் போகக்கூடாதென்ற முறைமையையுந் தவிர்ந்து போகுமாறு நேர்ந்ததென்பார் 'நாம்வந்து' என்று கூறினர்.

இந்தப்பாசுரத்தில், ஐந்தாமடியில் 'தூவித்தொழுது' எனக் கனிச்சீர் வந்தது; குற்றியலுகரம் அலகுபெறவில்லையென்க. இனி, 'தூமலர்தூ வித்தொழுது' என்று அலகிடலுமொன்று.

§மலர்தூவித்தொழுது வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க— முதலில் மனத்தினாற் சிந்திக்க, பின் வாயினாற்பாடி, அதன் பின்னரன்றோ மலர்தூவித்தொழுதல் முறைமை: அங்ஙனன்றி, முறைபிறழச்சொன்னது ஏனென்பார்க்கு முறைபிறழத் திரிகரணங்களால் வழிபாடுசெய்யினும் அருளீயும் ஆழியவன் என்றபடி. வாயினாற்பாடி யென்றவிடத்து, வாய்என வேண்டாது கூறினர், வாய்படைத்த பயன் பெற்றோம் என்று தெரிவித்தற்கு. மனத்தினால் சிந்திக்க என்பதற்கும் அங்ஙனே நயம் காண்க. (5)

6. புள்ளுஞ் சிலம்பின காண் புள்ளரையன் கோயிலில் *
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ? *
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு *
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி *
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை *
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும் *
மெள்ள வெழுந் தரியென்ற பேரரவம் *
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ - ள்.) பிள்ளாய் - சிறுமியே! புள்உம் சிலம்பின - பறவைகளும் [கூட்டினின்று] கூவ ஆரம்பித்துவிட்டன; புள் அரையன் கோயிலில் - பட்சிகட்கெல்லாந் தலைவனான ஸ்ரீ கருடாழ்வானுக்கு ஸ்வாமியாகிய பெருமானுடைய கோயிலிலே, விளி வெள்ளை சங்கின் பேர் அரவம் - (எல்லாரையும் வருமாறு)

அழைக்கின்ற வெண்ணிறமான சங்கத்தின் பேரொலியை, கேட்டிலையோ - (நீ) கேட்கவில்லையோ? பேய் முலை நஞ்சு உண்டு - பேய் மகளின் முலையிலே தீற்றியவிஷத்தை (அவளுயிரோடுங்)குடித்து, கள்ளம் சகடம் - வஞ்சனையால் வந்த சகடமானது, கலக்கு அழிய - கட்டுக்குலையும்படி, கால் ஓச்சி - காலினலுதைத்து,— வெள்ளத்து - திருப்பாற்கடலிலே, அரவில் - திருவனந்தாழ்வானிலே, துயில் அமர்ந்த - யோகநித்திரை செய்கின்ற, வித்தினை - (அவதாரங்கட்குக்) காரணமான திருமாலை, முனிவர்கள் உம் - தியானஞ்செய்யுந் தன்மையரானவரும், யோகிகள் உம் - கைங்கர்யஞ்செய்யுந் தன்மையுள்ளவரும், உள்ளத்து கொண்டு - மனத்திலே தியானித்து, மெள்ள எழுந்து - மெல்ல வெழுந்திருந்து, அரி என்ற பேர் அரவம்-'ஹரிঃ ஹரிঃ' என்ற பேரொலியானது, உள்ளம் புகுந்து - (உன்) மனத்திற்குட் புகுவதனால், குளிர்ந்து - மனங்குளிர, எழுந்திராய்—; (எ - று.)

இதுமுதற் பத்துப்பாசுரங்களில், முற்படவெழுந்தவர்கள் எழுந்திராதவர்களை நோன்புக்குஎன்று ஒரு வியாஜத்தினல் ஸ்ரீகிருஷ்ணநுபவஞ்செய்ய வருமாறு எழுப்புகின்றனர். முற்படத்துயிலுணர்ந்தவர்கள் முன்னம் ஒருத்தியை யெழுப்ப, எழுப்பப்பட்ட அவள்'பொழுதுவிடியுங்காலம் வருவதற்குமுன்னம் ஏன் என்னை யெழுப்புகிறீர்கள்?' என்ன, 'பொழுதுவிடிந்திட்டதே' என்று இவர்கள் சொல்ல, 'அடையாளமென?' என்று அவள் கேட்க, பறவை கூவுதல் சங்கின் ஒலிகேட்டல் என்பவற்றை அடையாளமாகச்சொல்ல, அவ்விரண்டு அடையாளங்களும் வேறு வகையாலும் தோன்றலாமென்று உறங்குகிறவள் சொல்ல, முனிவரும் யோகியரும் விடிய ஐந்து நாழிகைக்குமுன் துயிலுணரும்போது 'ஹரிঃ ஹரிঃ' என்று சொல்வதனலெழுந்த அரவத்தை அடையாளங் கூறுகிருர்கள்.[1] 'முற்படவுணர்ந்தவர்கள் தாம் தனியே ஸ்ரீ கிருஷ்ணனை யநுபவியாமல் மற்றவரை யெழுப்புவா னென்?' என்னில்,—ஸ்ரீ கிருஷ்ண குணநுபவத்திலே யிழியும்போது காலாழ்ந்து நெஞ்சழிந்து கண்சுழலுமாதலால் துணைவேண்டியிருத்தலாலும், சுவையுள்ள பண்டங்களைத் தனியே யநுபவித்தல் முறைமையாகாதாதலாலும், உருசியுடையாரெல்லாம் இழக்கவொண்ணுதென்ற நினைவாலும், பகவத்விஷயத்தை யநுபவிக்கும்போது ததீயரை [பகவானைச் சேர்ந்தவரை] முன்னிட்டுக்கொண்டு அநுபவித்தல் முறையாகுமாதலாலும். 'ஸ்ரீ க்ருஷ்ண குணநுபவம் எல்லார்க்குஞ் சமமாயிருக்க, சிலர் உறங்கவும் சிலர் எழுப்பவும் காரணம் என்?'

---

1. இப்படியுமோர் அடைவுகாட்டிப் பொருள் (Interpretation) கூறவேண்டுமோ என்னில், ஆம்; இல்லையேல், ஒரு பாட்டில் பொழுது விடிந்தமைக்கு ஓர் அடையாளம் சொன்னல் போதாதா? அங்ஙனில்லையே! மேலும், 15-ஆம் பாசுரம் வினவும்-விடையுமாக அமைந்திருக்கும் பெற்றியும் காண்க. எனவே, இங்ஙன் ஓர் அடைவுகாட்டிப் பொருள் காண்டலே தகுதியுடைத்து.

என்னில்,—ஸ்ரீ கிருஷ்ணனின் குணங்கள் சிலரை மயங்குமாறும், சிலரை இருந்தவிடத்திலிருக்க வொட்டாதவாறுஞ் செய்ததனு லாகும்.[1]

விடியற்காலத்தில் கூட்டினின்றும் பறவைகள் கூவுத லியற்கை. ஸ்ரீ விஷ்ணு கோவில்களில் சங்குஊதுதல், முற் காலத்து மரபு: விடியற்காலத்தில் நித்திரை தெளிந்தெழுந் திருக்கும்போது 'ஹரிஃ. ஹரிஃ' என்று பலமுறை சொல்லுதல், அறிந்தோர்களின் செய்கை. பேய்முலைநஞ்சு உண்டு கள்ளச் சகடங்கலக்கழியக் காலோச்சியவனென்று எம்பெருமானை இவர் கள் கூறியது - இவ்வரலாற்றைக் கேட்டால் துணுக்குற்று நித் திரை தெளிந்து எழுந்திருக்கக் கூடுமென்ற எண்ணத்தினு லாகும். தம்முடைய மனத்தில் எம்பெருமானைத் தியானித்த லால், 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை உள்ளத்துக் கொண்டு' எனப்பட்டது. கிருஷ்ணன் அவதரித்த பின்பு இடைய ருடைய பசுநிரைக்கொட்டில்களிலே வந்து யோகியரும் முனி வரும் படுகாடுகிடப்பர்களென வறிக. முனிவர்-பகவத்குணா நுபவஞ் செய்பவர்; யோகியர்-பகவத் கைங்கர்யஞ்செய்பவர். முனிவரும் யோகியரும் மெள்ள வெழுந்தது-'தமது மார்வமாகிய கோயிலிலெழுந்தருளியிருக்கின்ற அந்தர்யாமியாகிய பெருமான் அசையப் போகின்றானே' என்ற பரிவினாலாம்.[2] கோ-தலைவனது; இல்-இருக்குமிடம். புள்-கருடாழ்வானுக்கு, அரையன்-தலை வனாகிய திருமாலினது, கோயிலிலென்றுமாம். பிள்ளை-இளமைப் பெயர். இச்சொல்லுக்கு—பகவத்விஷயத்தினினிமையை முற்றவும் அறியாதவளென்று கருத்துக்கொள்வர். குளிர்ந்து=குளிர: எச்சத்திரிபு. இனி, 'குளிர்ந்து' என்பதை 'குளிர்ந்தது' என்ற முற்றின் விகாரமெனக்கொண்டு, எங்களுடைய உள்ளத்திற் புகுந்து குளிரவலித்தது என்று பொருளுரைப்பர் வ்யாக்யாதா.[3] காண்-தேற்றப்பொருளது.

---

1 உதாரணமாக (i) 'நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ? (செ:7) (ii) 'ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாளோ (செ: 9) (iii) முகில் வண்ணன் பேர்பாட, சிற்றாதே பேசாதே செல்வப்பெண்டாட்டி! நீ எற்றுக் குறங்கும்பொருள் (செ:11) (iv)'மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் (செ:12)என றவிடங்களில், எம்பெருமான் திருநாமங்களைச் சொன்னதைக் கேட்டு அவன் குணங்களில் ஈடுபட்டுச் சிலர் பரவசையாய் மயங்கிக்கிடக்கிறார்களென்பது ...படும். (v) பனித்தலைவீழ நின்வாசற் கடைபற்றி (செ: 12) ...கின்றோம் என்றவிடத்து இருந்தவிடத்திலிருக்க வொட்டா தவாறுசெய்ததுகிருஷ்ணனின்குணங்கள் என்பதும் பெறப்படும்.

2 வயிறுவாய்க்கப்பெற்ற பெண்கள் வயிற்றினுள் உறையும் பிள்ளைக்கு நோவுவராதபடி மெள்ள எழுந்திருப்பதுபோல என எடுத்துக்காட்டு கூறுவர் பெரியோர்.

3 "படுக்கைக் கீழே வெள்ளங்கோத்தாற்போலே, திருநாமம் செவிவழியே புகுந்து வவ்வலிட்டது" என்றது நயமுடைத்து.

§ 'புள்ளும்' என்றவிடத்து உம்மைக்குப் பொருணயம்-நாங்கள் துயிலுணர்ந்து வந்து சிலம்புவது [ஒலியெழுப்புவது] அடையாளமாகாதோ? ஆகும்: அஃதன்றியும், புள்ளும் சிலம்பின என்றபடி.

'பாகவதர்கள் பகவத்கைங்கர்யமாகத் தம்தமது சாதிக்குத் தகுதியாகச் சந்தியாவந்தனம் முதலிய கடன்களைச் செய்யப் போவதையும், பகவானை யுள்ளபடி யறிவிக்கிற பிரணவத்தின் பொருள் எங்கும் முழங்குவதையும், யோகியரும் முனிவரும் பிரகிருதிஸம்பந்தத்தாலேவருகின்ற அஹங்கார மமகாரங்களைப் போக்கிக் காமகுரோதாதிகளான குற்றங்களையும் அடியவர்க்குத் தவிர்த்து ஜகத்ரக்ஷணத்தைச் சிந்தை செய்கின்ற ஆதிகாரணத்தைத் தியானித்து அவன் திருநாமங்களைச் சொல்லுவதையுஞ் செவி குளிரக் கேள்: இவற்றால் மனந் தெளிவாயாக' எனப் பகவத்விஷயத்தில் புதியதாக ருசியுண்டாகிய ஶிஷ்யனுக்கு ஒரு ஆசார்யன் உபதேசிப்பதாக இப்பாசுரத்துக்கு ஸ்வாபதேசங் காண்க. ஞானம் அநுஷ்டாநம் இவைகளைக் கொண்டவராய்ப் பகவானைச் சேர்ப்பிக்கவல்ல ஆசார்யரைப் பக்ஷிகளாகக் கூறுவது தகுமென்பர். இதுமுதற் பத்துப் பாசுரங்கள் முதலாழ்வார்முதல் ஆழ்வார் பதின்மரை உணர்த்துமெனெ உள்ளுறை கூறுவர் வானமாமலைச்சீயர்.[1] (6)

7. கீசுகீசென் றெங்கு மானைச்சாத் தன்* கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே!*
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து *
வாச நறுங்குழ லாய்ச்சியர்* மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ ? *
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி *
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ ? *
தேச முடையாய்! திறவேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) பேய் பெண்ணே-அறியாமைக் குணத்தையுடைய பெண்ணே! ஆனைச்சாத்தன்-வலியன் குருவிகள், எங்கும்-எல்லாவிடத்தும், கலந்து-(பேடையுடன்) சேர்ந்து, கீசுகீசென்று பேசின-கீச்சுக்கீச்சென்று கத்திச்சத்திக்கின்ற, பேச்சு அரவம்-குரலொலியை, கேட்டிலை-கேட்கவில்லையோ? நறு வாசம் குழல் ஆய்ச்சியர்-நறுமணமுள்ள கூந்தலையுடைய இடைச்சியர், காசுஉம் பிறப்புஉம் கலகலப்ப-காசு பிறப்பு என்ற ஆபரணங்கள் கலகலவென்று சத்திக்க, கை பேர்த்து-கையை முன்பின்னாக மாறிமாறி, மத்தினால் ஓசைபடுத்த-மத்தினாலோசையை யுண்டாக்கின, தயிர் அரவம்-தயிர்கடைகின்றஓசையை, கேட்டிலை-

---

§ எழுப்பப்படுபவர் பெண்பிள்ளைகளாயினும், ஆழ்வார்பதின்மருள் ஒவ்வொருத்தர்க்குள்ள தகுதியைப் பெற்றவர்போல் ஒவ்வொரு பெண்பிள்ளையிருத்தலின் இங்ஙன் கூறியது. இதனை, ஒவ்வொரு பெண்ணையும் விளித்தலில், அவ்விளியிலுள்ள வேறுபாடு நோக்கி யுணர்க.

கேட்கவில்லையோ? நாயகம் பெண் பிள்ளாய்-தலைமைகொண்டாடு கின்ற பெண்பிள்ளையே! நாராயணன் - நாராயணனென்ற திரு நாமத்தையுடையவனும், மூர்த்தி-(பல யுகங்களிலும்) திருமேனி களைக் கொண்டு அவதரிப்பவனுமான, கேசவனை-கேசியென்னு மசுரனை நிரஸித்த கிருஷ்ணனை, பாடவும்-(நாங்கள்)பாடுகையிலும், நீ—, கேட்டுே கிடத்தியோ-கேட்டபடியே படுத்துக்கொண்டிருக்க உரியையோ? தேசம் உடையாய் - ஒளியையுடையவளே! திற— (கதவைத்) திறப்பாயாக; (எ-று.)

எம்பெருமான் விஷயத்தில் மிக்க ஈடுபாட்டினால் மெய்ம் மறந்து கிடக்கின்றாளொருத்தியைப் பொழுதுவிடிந்த தென்று சொல்லி எழுப்பவந்தவர்கள் எழுப்பினார்களாக, அவளும் அதை நம்பாமல் 'விடிந்தமைக்கு அடையாளமென்?' என்று அறிய விரும்பினளாக, எழுப்புகின்றவர்கள் ஆனைச்சாத்தன் கலந்து பேசினமையைச் சொல்ல, அவள் இவர்கட்கு இப்படிச் சொல் வதுவே தொழிலென்று பேசாமற் கிடக்க, எழுப்புகிறவர்கள் விழித்திருந்தும் பேசாமலிருப்பதற்காகச் சினந்து, 'பேய்ப் பெண்ணே! மந்தரமலையையிட்டுக் கடலைக் கலக்கினாற்போல மத்தினால் தயிர்கடையும் ஓசையைக் கேட்கவில்லையோ? உன் னுடைய செல்வச்செருக்கினாலன்றோ நாங்கள் நாராயணமூர்த் தியைப் பாடிக்கொண்டு வரவும் நீ கேட்டே கிடக்கிறது? உன்னைக் காணும விருண்டுகிடக்கிற எங்களுக்கு இருள்தீர நீயேவந்து கதவைத்திறவாய்' என்கின்றார்கள். 'பேய்ப்பெண்ணே' என்றும் 'நாயகப்பெண்பிள்ளாய்' என்றும் மாறுபடக்கூறினாலும், எப்படி யாவது எழுந்திருக்கச் செய்யவேணுமென்ற கருத்தினாலேயே சொல்லுவதனால் மாறுபாடில்லை.

'பேர்த்து' என்பதனால், கை பேர்ப்பதிலுள்ள அருமைதோன் றும்; அதற்குக் காரணம்-தயிர்செறிந்து கிடப்பதுபற்றி மெல்லிய ரான இடைச்சிமார்க்குக் கடைய முடியாமையினாலென்றாவது,1 ஸ்ரீ கிருஷ்ணன்வந்து தயிரை மோராக்கவொட்டேனென்று தடுப் பதனாலென்றாவது கொள்க. காசு-பொன்னை அச்சிலேயிட்டு அடித்துச் செய்யப்பட்ட உருக்கள் கோத்த மாலை: காசுமாலை: மேகலையுமாம். பிறப்பு-பலவகைவடிவமாகச் செய்த உருக்கள் கோத்த மாலை; தாலி யுருசரமென்னலாம். தேசம்-தேஜஸ். 'நாயகப் பெண்பிள்ளாய்' என்ற விளி-கிருஷ்ணானுபவத்தின் மிகுதியைக் கண்டு கொண்டாடிக் கூறியதென்றாவது இகழ்ச்சிக்குறிப்பென் றாவது கொள்க.

உள்ளுறை:-பாகவதர்கள் ஒருவரையொருவர் பிரியும்போது பிரிவுத்துயர்தோன்றப் பேசுவதையும், ரஹஸ்யத்ரயங்களையும் வாயினாற்சொல்லுகின்றவர்களான ஸ்வரூப உபாய புருஷார்த்

---

1 "தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார்"
என்ற கம்பர் பாடலும் நோக்குக.

தங்களை யறிந்த ஸ்ரீவைஷ்ணவர்களினால் சேர்திருந்திய ஸம்ஸாரி களின் திவ்யப்ரபந்தாநுஸந்தாநத்தையுங் கேட்டிலேயோ? பாகவத விஷயத்தின் மேன்மையை யறிந்த நீ பகவதநுபவத்தினுற்கருவப் பட்டிராமல் பாகவதர்கள் உனதுபகவதநுபவத்தை யுணரும் படியாகவந்து நீ உன் ஜ்ஞாநத்தை ப்ரகாசிப்பிக்கவேண்டு மென்பதாம். (7)

8. கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு *
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்*
போவான் போகின்றாரைப் போகாமற் காத்து*உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம்* கோது கலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு*
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால் *
ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) கீழ்வானம்-ஆகாயத்திலே கிழக்குப் பக்கம், வெள் ளென்று-வெளுத்திருக்க,-எருமை-எருமைகள், சிறு வீடு-சிறிது (நேரம் மேய்வதற்காக) விடும்போதிலே, மேய்வான்-(பனிப்புல்) மேய்வதற்காக, பரந்தன காண்-(நான்கு பக்கத்திலும்) பரவின: போவான் போகின்றார்-(நோன்பிற்கு) நீராடப்போகும்பொருட்டுப் புறப்பட்டவர்களான, மிக்கு உள்ள பிள்ளைகள் ஐஉம்-(மற்றும்) மிகுதியாகவுள்ள பெண்பிள்ளைகளையும், போகாமல்-(முன்னம்) போகாதபடி, காத்து-தடுத்து, உன்னை கூவுவான்-உன்னைக் கூப்பிடும்பொருட்டு, வந்து நின்றோம்-(நாங்கள்) வந்து நிற்கின் றோம்; கோதுகலம் உடைய பாவாய் (கிருஷ்ணனுற்) கொண்டாடு தலை யுடைய பதுமைபோன்றவளே! எழுந்திராய்-எழுந்திருப்பா யாக; மா வாய் பிளந்தானை-(கேசியென்ற) குதிரை வடிவமான அசுரனது வாயைப் பிளந்தவனும், மல்லரை மாட்டிய தேவாதி தேவனை-மல்லர்களை யழித்த தேவாதிதேவனுமான பெருமானை, நாம்—, சென்று- கிட்டி,-பாடி—, பறை கொண்டு-(நோன்பிற்குப்) பறையைவேண்டிக்கொண்டு, சேவித்தால்-வணங்கினால், (அப் பிரான் நமது விருப்பத்தை முடிப்பன்: ஆதலால்), ஆ ஆ என்று- அலறிக்கொண்டு [விரைவாக], ஆராய்ந்தருள்-(நாங்கள் சொல்லு வதை) ஆராய்ந்து புறப்படுவாயாக; (எ-று.)

ஸ்ரீ கிருஷ்ணனும் வேண்டும்படியா யிருப்பாளொருத்தியைப் பொழுதுவிடிந்தமைக்குஉள்ள அடையாளங்களைச் சொல்லியும், எழுந்த பின்பு தாங்கள் செய்யவேண்டியவற்றையும் அவற்றைச் செய்வதாலுண்டாகும் நன்மைகளையும் சொல்லியும் எழுப்புகிறார் கள்: கூவுவான் வந்து நின்றோம்-கூவுகையே பயனாகக் கருதி வந்து நிற்கின்றோ மென்றவாறு. மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதிதேவனைப்பாடி-ஸ்ரீ க்ருஷ்ணனுடையவீரசரித்தி ரங்களைப் பாடி யென்றபடி. பால் மிகுதியாகக் காண்பதற்காக எருமைகளைக் கிழக்குவெளுக்கையில் கறப்பதற்கு முன்னே ஒருதரம் பனிப்புல் மேயும்படி விடுதல், 'சிறுவீடு' எனப்படும்;

கறந்த பின்பு எருமைகளைப் பகலெல்லாம் மேயும்படி வெளியே விடுவதொன்றிருத்தலால், முதலில்விடுதல் இப்பெயர் பெற்றது. ஆ ஆ-விரைவுக் குறிப்பு. இனி, 'ஆவாவென் றாராய்ந்தருண் மேலோ ரெம்பாவாய்' என்று பாடங்கொண்டால், நாம்சேவித் தால் (எம்பெருமான்) ஐயோ வென்று நம்மீது இரக்கங்கொள்வா னெனப்பொருளாம்; அருண்-'அருளும்' என்னுஞ் செய்யுமென் முற்று திரிந்து நின்றது. அருள் என்பதற்கு-அருள்வானென்று பொருள் சொல்லுதல் இயலாது. முதலிலுள்ள பாடத்துக்கு 'சேவித்தால்' என்ற எச்சத்துக்கு முடிக்குஞ் சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

$ பாவாய் எழுந்திராய்-பெண்ணின் வருத்தம் அறியாத வனைப்போலன்றிக்கே அறியக்கடவ நீ கிடக்கக் கடவையோ? என்பது நயம். சென்று என்றது-விரகந்தின்று குறைக்கொள்ளி யான தம் சரீரத்தை அவன் காண நேரிடும் என்கைக்காக.

பாகவதரிடத்திலே மிக்க அன்பையுடைமையாலே பகவா னுக்கு மிகவும் இஷ்டராய முக்தர்போல இருக்கிற பாகவதரொரு வரை முன்னிட்டுக் கொண்டு பகவானைக் கிட்டுதற்கு ஏற்றகாலம் வந்ததென்று சொல்லி யெழுப்புதல், இப்பாசுரத்திற்கு உள்ளுறை பொருள். முதலிரண்டடிகள்-ஸத்வகுணம் தலையெடுக்கத் தமோ குணங்கள் விலகிப் போவதைக் குறிப்பிக்கும். (8)

9. தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய *
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும் *
மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய் *
மாமீர்! அவளை யெழுப்பீரோ? * உம்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ? *
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ? *
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.

(இ - ள்.) தூமணி மாடத்து - பரிசுத்தமான மணிகளிழைத் துச் செய்யப்பட்ட வீட்டிலே, சுற்றும்-படுக்கையைச் சுற்றிலும், விளக்கு எரிய - விள்க்கு எரிந்து கொண்டிருக்கவும், தூபம் கமழ- (அகில் முதலியவற்றின்) புகை கமழவும், துயில் அணைமேல் கண் வளரும்-தூங்குவதற்கு உரியபடுக்கையிலே தூங்குகின்ற, மாமான் மகளே! -மாமனது பெண்ணே! மணி கதவம் தாள் திறவாய்-மணி களினாலாகிய கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாய்; மாமீர் - மாமி மார்களே! உம் மகள் தான் - உமது பெண், ஊமையோ-ஊமையா? அன்றி - அல்லாமல், செவிடோ - செவிடா? அனந்தலோ - சோர்வா? 'மா மாயன்-மிகவும் ஆச்சரியமான குணஞ்செயல்களை யுடையவன், மாதவன் - லக்ஷ்மிக்குக் கணவன், வைகுந்தன்- வைகுண்டநாதன்', என்று என்று நாமம் பலஉம் நவின்று - என்று (நாங்கள் எம்பெருமானுடைய) பல திருநாமங்களையுஞ் சொல்வதனால், ஏமம் - (எழுந்திராதபடி) காவலைச் செய்கின்ற, பெருந்துயில் - மிக்க தூக்கத்திலே, (பட்டாளோ) - அகப்பட்

டாளா? மந்திரம் பட்டாளோ - மந்திரத்திற் கட்டுப்பட்டாளா? அவளை - (உமது) அந்தப்பெண்ணை, எழுப்பீரோ - எழுப்ப மாட்டீர்களோ? (எ - று.)

கிருஷ்ணன் வருகிறபோது வரட்டுமென்று ஆறியிருப்பவ ளொருத்தியை, இதனு லெழுப்புகிறுர்கள். 'மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்' என்று எழுப்பவும் உறங்குபவ ளெழுந்திராம லிருக்க, அவள் தாய் 'உன்னை எழுப்பவும் நீ உறங்க லாமோ? எழுந்து தாள் திறவாய்'என்ன, எழுப்புகின்ற இவர்கள் அவ்வொலியைக் கேட்டு 'மாமீர்! உம்மகள் எழுந்து எங்களுக்கு மறுமொழி சொல்லாமலிருக்கின்ருளே; அவள் ஊமையோ? மறு மாற்றஞ் சொல்லாதிருந்தா லிருக்கட்டும்; கதவை யிடிக்கின்ற ஒலி கேட்கக் காதுமில்லையோ? அன்றி, உறங்க இரவில் வெகு நேரஞ் சென்றதனுல் துயிலுணராமற் சோர்வு கொண்டிருக்கின் ருளோ? அன்றி, நாங்கள் எம்பெருமான் திருநாமங்களைச் சொன்னதனுற் பரவசையாய் மயங்கிக் கட்டுண்டிருக்கின்ருளோ? எப்படியிருந்தாலும், நீர் அவளையெழுப்பவேணும்' என்கிருர்கள். 'நாங்கள் நெஞ்சிருண்டு படுக்கையிற் சாயப்பெருமல் அலைந்து கொண்டிருக்க, நீ சுற்றும் விளக்கெரியத் துயிலணை[1] மேற் கண் வளருதல் தகுதியோ?' என்ற குறிப்பு, முதல் மூன்றடிகளில் தோன்றும்.

மாமான் - மாமனென்பதன் விகாரம். மாமீர் - ஒருவரைக் கூறும்பன்மை. 'உன்மகள்' என்ற பாடத்திற்கு-ஒருமைப்பன்மை மயக்க மென்னவேண்டும். நவின்று = நவில; எச்சத்திரிபு. நாமம் பலவும் நவின்று மாமீர் அவளை யெழுப்பீரோ என்று கூட்டிப் பொருளுரைத்தலுமாம். நவின்று என்பதை முற்ருகக் கொண் டால், நவின்றேன் எனத் தன்மையொருமை முற்ரும்; "றவ்வொ டுகரவும்மை" என்ற நன்னூற் சூத்திரத்தைக் காண்க.

§'மாமாயன் மாதவன் வைகுந்தன்' என முப்பெயரைச் சிறப் பாகக் குறித்திருத்தல் ஏனென்னில்,—'மாதவன்' என்பது ஸ்ரீயஃ பதி என்பதையும், 'மாமாயன்'என்பது அவனது நீர்மையையும், 'வைகுந்தன்' என்பது அவனது பரத்துவத்தையும் காட்டும். அன்றியும், பெரியபிராட்டியின் சம்பந்தத்தாலேயே நீர்மையும் [சௌலப்யமும்] பரத்துவமும் பகவானுக்குச் சித்திக்கும் என்ப தைத் தோற்றுவிக்க 'மாதவன்' என்பதை நடுவண் வைத்தாள்.

இப்பாசுரத்திற்கு உள்ளுறை. — 'குற்றமற்ற திருமேனியிலே ஜ்ஞாநம் ப்ரகாசிக்கவும், அநுஷ்டாநங்கள் குறைவின்றியிருக்கவும் பகவானையே உபாயமாக உறுதியாய்நம்பி அப்பரமனுக்குப் புத்திர ஸ்தாநீயரான பாகவதரே! உம்மையநுபவிக்க விரோதி யான எங்கள் தேஹாத்மாபிமானங்களைப் போக்குவீர்' என்னவும் அப்பாகவதர் வெறுமனேயிருக்க, அப்படிப்பட்ட ஜ்ஞாநாதிக்யம் அவர்க்கு உண்டாகுதற்குக் காரணமான அநந்யோபாயத்வம் [எம் பெருமானைத் தவிர வேருென்றை உபாயமாகப் பற்ருமை] ஆகிற

---

[1] துயிலணை - கிருஷ்ணவிரஹத்தையும் ஆற்றவற்ருன படுக்கை.

ஸ்வரூப ஜ்ஞாநம் 'சிலர் இப்படியழைக்க வெறுமனே யிருப்பானேன்?' என்ற ஜ்ஞாநத்தை அவர்க்கு உண்டாக்க, அந்தஜ்ஞாநத்தைநோக்கி 'உம்மகள்தான் ஊமையோ?' முதலியனவாகச் சொல்லுகிறது. ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ - நமஸ்ஸால் ஸ்வப்ரவ்ருத்தி [தானொருகாரியத்துப் புகுகை] யினின்றும் மீட்கப் பட்டாளோ? என்றபடி. (9)

10. நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்! *
மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார் *
நாற்றத் துழாய்முடி நாரா யணன்* நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால்* பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும் *
தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?*
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே!*
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) நோற்று - (க்ருஷ்ணனை யநுபவிக்க முற்பிறப்பில்) தவஞ்செய்து, சுவர்க்கம் புகுகின்ற - (இப்போது) சுகத்தையநுபவிக்கிற, அம்மனாய் - தலைவியே! வாசல் திறவாதார் - வாயிற்கதவைத் திறவாதிருப்பவர், மாற்றம்உம் தாராரோ - (ஒரு) மறுமொழியாவது சொல்லார்களோ? நாற்றம் துழாய் முடி - நறுமணமுள்ள திருத்துழாயை முடியிலணிந்த, நாராயணன் - எம்பெருமான், நம்மால் போற்ற - நாமாக ஸ்தோத்திரஞ் செய்ய, பறை தரும் - (நமது நோன்புக்கு வேண்டிய) பறையைத் தரக்கூடிய, புண்ணியன் - உபாயமானவன்; (அப்படியிருக்கவும் நீ உறங்குகின்றாயே! இது தகுதியோ?) பண்டு ஒரு நாள் - முன்னொருகாலத்தில், கூற்றத்தின் வாய் வீழ்ந்த - (சக்கரவர்த்தித் திருமகனால்) யமன் வாயிலே விழுந்த [இறந்த], கும்பகருணன்உம் - கும்பகருணனென்பவனும், தோற்று - (உனக்குத்) தோற்றுப்போய், பெருந்துயில் - (தனது) பெரிய நித்திரையை, தந்தானோ - கொடுத்தானோ? ஆற்ற அனந்தல் உடையாய் - மிகவுஞ் சோம்பலையுடையவளே! அருங் கலமே - (கிடைத்தற்கு) அரிய ஆபரணம் போன்றவளே! தேற்றம் ஆய் வந்து - தெளிவுடன் வந்து, திற - (கதவைத்) திறப்பாயாக; (எ-று.)

இதனால், கிருஷ்ணாநுபவத்தில் மூழ்கிப் பரவசையாயிருப்பாளொருத்தியை யெழுப்புகிறார்கள். முற்பிறப்பிற் செய்த நோன்பினால் இப்போது கிருஷ்ணாநுபவம் விஞ்சிச் சுகத்தில் மூழ்கியிருப்பவளே! நீ எமது செவிகுளிர மறுமொழி சொல்லாவிட்டாலும், கண் குளிர உன்னைச்சேவிக்கும்படி கதவையாவது திறக்கலாகாதோ? நீ கதவைத் திறவாமலிருக்கும்போதும் எங்குமுள்ள பெருமான் உன்உள்ளேபுகுந்து உனக்குச் சுகாநுபவத்தைத் தருவது, வெளியே நறுமணங் கமழ்வதனால் எங்களுக்குத் தெரிகின்றது. இப்படிச் சுகிக்கிற நீ நித்திரை தெளிந்து சோம்பலைவிட்டுக் கதவைத் திறவென்பதாம். நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனை - இப்போது நோற்க வேண்டாதபடி நோன்பின் பயன் கைகூடப் பெற்றவளென்றபடி. இனி எதிர்மறையிலக்கணையால், 'நீ எங்களோடு வந்து நோற்றுச் சுகம்பெற

நினைப்பது அழகிது!' என்று இகழ்ச்சியாகக் கூறுகிறார்களுமாம். தோற்றவர்பொருளை வென்றவர் கைப்பற்றிக் கொள்ளுதல் முறைமை யாதலால், 'தோற்று உனக்கே பெருந்துயில் தந்தானோ?' என்றது. உனக்கே, ஏகாரம்-'இறந்தவர்பொருளைத் தாயத்தார்கொள்ளும் முறை போய்விட்டதோ?' என்ற கருத்தைக் காட்டும். ஆல்-அசை: ஆதலாலெனினுமாம். தோற்றும், உம்மை-இசைநிறை.

§ 'கூற்றத்தின்வாய் வீழ்ந்த' என்ற தொடர்ப்போக்கை நோக்குமிடத்துத் தண்ணீர் குடிக்கக்கல்லின ஏரியிலே அமிழ்ந்து சாவாரைப்போலே தானாகவே தன்னழிவைத் தேடிக்கொண்டான் கும்பகருணன் என்பது பெற்றும்.

பகவானையே உபாயமாகப் பற்றியிருக்கும் பாகவதரொருவரை யுணர்த்துதல், இப்பாசுரத்திற்கு உள்ளுறையாம். பாகவதருக்கு நித்ரை-இதரவிஷயங்க ளொன்றையுங் கவனியாமை. (10)

11. கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து *
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும் *
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!*
புற்றர வல்குல் புனமயிலே! போதராய் *
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்து * நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட *
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி!* நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) கன்று பல கறவை கணங்கள்-கன்றுகளோடுகூடினவான பல பசுக்களின் கூட்டங்களை, கறந்து—, செற்றார்-பகைவர்களுடைய, திறல்-வலிமை, அழிய-கெடும்படி, சென்று-போய், செரு செய்யும்-போரைப் புரிகின்ற, குற்றம் ஒன்று இல்லாத-ஒருவகைக் குற்றமுமில்லாத, கோவலர்தம் - இடையர்களுடைய, பொன்கொடியே-அழகிய கொடி போன்றவளே!-புற்று அரவு அல்குல்-புற்றிலே வசிக்கிற பாம்பின்படம் போன்ற அல்குலையுடைய, புனம் மயிலே-புனத்திலே வாழும் மயில்போன்ற சாயலையுடையவளே! போதராய்-எழுந்துவருவாய்; செல்வம்-செல்வத்தையுடைய, பெண் டு ஆட்டி-பெண்தன்மையையாள்பவளே! நின் முற்றம்-உன்னுடைய முன்வாசலிலே, சுற்றத்து தோழிமார் எல்லாரும்-உறவுமுறையுடைய தோழிகள்யாவரும், வந்து புகுந்து—, முகில் வண்ணன் பேர்-மேகம்போன்ற திருநிறத்தையுடைய கிருஷ்ணனது திருநாமத்தை, பாட-(வாயினால்) பாடவும்,—சிற்றாது-(உடம்பு) அசையாமலும், பேசாது-மறுமொழி சொல்லாமலும், நீ—, உறங்கும் பொருள்-உறங்குகின்ற செயல், எற்றுக்கு—எந்தப்பயனை எண்ணி? (எ-று.)

உனது பந்துக்களும் தோழிமார்களுமாகிய பலரும் வந்து எழுப்பவும், நீ கிருஷ்ணாநுபவஞ்செய்துகொண்டு தூங்குவது தகுதியல்ல: ஆகையால், எழுந்து வரவேணுமென்று எல்லாப் படியாலும் மேன்மைபெற்றிருப்பாள் ஒருத்தியை யெழுப்புகிறார்

கள். கற்றுக் கறவைக்கணங்கள்- (ஸ்ரீ க்ருஷ்ணஸ்பர்ஶத்தாலே) இளமை மாறாமலிருக்கிற கறவைக்கணங்க ளெனினுமாம். செல்வப் பெண்டாட்டி-எங்களுடைய செல்வம்போலேயிருக்கிற பெண்ணே! க்ருஷ்ணாநுபவம் நிரம்பியிருக்கிறவளே! எனினுமாம். முற்றம்-வீட்டின் முன்னிடம். கன்றுஎன்ற மென்றொடர், வன்றொடராயிற்று.

§ சென்று செருச்செய்யும் என்றவிடத்து 'எதிரிகள் வந்தால் போர் செய்வோம்' என்றிராமே அவர்களிருந்த இடத்து ஏறச் சென்று போரிடல் என வீரம் குறித்தவாறு. சக்ரவர்த்தித் திருமகனைப்போலே இவர்கள் வீரம். 'சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்' என்றதும் நோக்குக. 'செருச் செய்யும் குற்றமொன்றில்லாத' என்றதொடர் தழிஞ்சி என்ற புறத்துறையை உளப்படுத்தும். 'புனமயிலே' என்று கொண்டாடியது, புனத்தை மயில் சிறப்பிக்குமாபோலே, இந்தப் பெண்கூட்டத்தைச் சிறப்பிக்க நீ போதராய் என்றபடி. புனமயிலே-க்ருஷ்ணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளகபாரத்தை யுடையளாகை எனக் குறிப்பித்தவாறு. பொற்கொடியே, புனமயிலே, செல்வப் பெண்டாட்டி என்பன குலத்தாலும் ரூபத்தாலும் குணத்தாலும் ஆகிய எல்லாவற்றாலும் சிறந்தவளென்றபடி.

'ஈஶ்வரனே உபாயமும் உபேயமும்' என்று இருப்பவர்களின் ஆதரத்துக்கு விஷயமாம்படி மேன்மைபெற்ற பாகவதோத்தமரை யுணர்த்துதல், இப்பாசுரத்திற்கு உள்ளுறை. கற்றுக் கறவை... கறந்து-குடிகுடியாக வந்தடைந்த ஶிஷ்யர்களுக்கு ஜ்ஞாநோபதேசஞ் செய்து. நீ உறங்கும்பொருள் எற்றுக்கு-எங்களையும் ஸ்ரீ கிருஷ்ணாநுபவத்திற்கு உடன்சேர்த்துக்கொள்ளாமல் அகற்றுகை பிரயோஜநமோ? இன்னும் ஸம்ஸாரிகளைத் திருத்துகை பயனோ? 'கற்றுக்கறவைகறந்து குற்றமொன்றில்லாத' என்றதனால், ஜாதிக்குத்தக்க தொழிலைக் கைங்கர்யமாகச் செய்தலே ஸ்வரூபத்திற்குத் தக்கதென்பது பெறப்படும். (11)

12. கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி *
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர*
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!*
பனித்தலை வீழநின்வா சற்கடை பற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற*
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்*
இனித்தா னெழுந்திரா யீதென்ன பேருறக்கம்?*
அனைத்தில்லத் தாரு மறிந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) இளங் கன்று எருமை - இளங்கன்றையுடைய எருமைகள், கனைத்து - (பாலைக்கறவாமையால்) கதறிக்கொண்டு, கன்றுக்கு இரங்கி - (தமது) கன்றுகளிடத்திலே மனமிரங்கி, நினைத்து - (அக்கன்றை) நினைப்பதனால்,—முலைவழி - முலைக்காம்பின் வழியாக, நின்று - நிலையாக, பால் சோர - பால்பெருக, (அதனால்) இல்லம் நனைத்து-வீடுமுழுவதையும் ஈரமாக்கி, சேறு ஆக்கும் - சேறாக்குகின்ற, நல் செல்வன் - மிக்க செல்வத்தை

யுடையவனது, தங்காய் - தங்கையே! (நாங்கள்), பனி - பனியானது, தலை வீழ-(எங்கள்) தலைமீதுவிழ, நின் கடைவாசல் பற்றி- உனது தலைவாசலைப் பிடித்துக்கொண்டு,—சினத்தினால்-(தனது) கோபத்தினால், தென் இலங்கை கோமானை செற்ற - தென்னிலங்கைக்கு ராஜனான ராவணனைக் கொன்ற, மனத்துக்கு இனியானை- (நினைக்கின்ற) மனத்துக்கு இனியனான ஸ்ரீராமனை, பாடவும்- பாடும்போதும், நீ—, வாய் திறவாய்-வாயைத் திறவாமலிருக்கிறாய்: அனைத்து இல்லத்தார்உம் - எல்லா வீட்டிலிருப்பவரும், அறிந்து - துயிலுணர்ந்த பின்பும், பேர் உறக்கம் ஈது என்ன - பெருந் தூக்கமாகிய இது என்ன? [உறங்குதல் தகுதியன்று]; இனித்தான் - இனியாவது, எழுந்திராய்—; (எ-று.)

க்ருஷ்ணனை விட்டுப் பிரியாமலிருப்பானொருத்தன் தங்கையை இதனாலெழுப்புகிறார்கள். மேலே பனிமழை பொழிந்து வெள்ளமிட, கீழே பால் வெள்ளமிட, நடுவே ஸ்ரீ கிருஷ்ணனிடத்து மால் [பெருங் காதல்] வெள்ளமிட, தெப்பம் பற்றுவாரைப்போலே நின் வாசற்கடையில் தண்டியத்தைப் பற்றிக் கிடந்து வருந்துகின்ற நாங்கள் உஜ்ஜீவிக்கும்படி எழுந்துவாராயென்பதாம்.[1] 'கனைத்து......நற்செல்வன்'-தமது முலை பால் மிகுதியைப்பொறாமல் கடுக்கவும் அதைப்பற்றிச் சிந்திக்காமல் தம் கன்றுகளை நினைந்து எருமைகள் கனைக்க, வாத்ஸல்யத்தாலே முலைக்காம்பினின்று தானே சிந்துகின்ற பாலின் வெள்ளத்தை மிதித்து மிதித்து வீடெல்லாம் சேறாய்விடுகின்ற நற்செல்வன்: இவனுக்கு உடன்பிறந்தவன் எப்போதுங் கிருஷ்ணனை விட்டுப் பிரிந்து வராமையால் கறப்பாரின்றி இங்ஙனமாகிறதென்க.[2] நற்செல்வன் - அஸ்திரமான ஐஶ்வர்யத்தைப் போலல்லாமல் நிலைநின்ற செல்வமான கிருஷ்ணன் திருவடிகளில் நிரந்தர ஸேவையையுடையவன்.[3] சக்கரவர்த்தித் திருமகனைப் பாடுவது, ஸ்ரீ

---

1. இந்த இடத்து இரக்கந்தோன்ற நிற்கும் நயம் வாசாமகோசரம். இதனை ஆங்கிலத்தில் 'Pathos' என்பர். 'பால்சோர நனைத்தில்லஞ் சேறாக்கும்' என்ற ஆண்டாளின் இந்தக் கருத்தையொட்டியே கம்பன் பாட்டமைத்துப் பால் வீணாகாதபடி செய்த நயத்தை ஈண்டு ஒருசார் ஒப்புநோக்கியின்புறுக: "சேலுண்ட வொண்கணாரில் திரிகின்ற செங்காலன்னம், மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை, காலுண்ட சேற்றுமேதிக் கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைத் தாலாட்டும் பண்ணை" (நாட்டுப் படலம், செ: 13) காண்க.

2. இதனைப் பெண்கள் குறித்தது—அவன் எருமைகள் கறவாவிட்டால் அவைபடும் பாட்டை நாங்கள் உன்னாலே படாநின்றோம் என்கை.

3. கைங்கரிய லக்ஷ்மியிறே இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸம்பத்து.

கிருஷ்ணனைப்போலப் பெண்களை வருத்தாமையாலாம்.[1] ஆனைத் தில்லத்தாருமறிந்து - இவ்வூரிலுள்ளவர் யாவரும் நாங்கள் உன் வாசலிலே துவண்டிருந்து எழுப்ப நீ தூங்குவதை யறியும்படி என்றுமாம்.

பகவதநுபவம் பெற்ற பாகவதநிஷ்டரான பாகவதரொருவரை யுணர்த்துகின்றார்களென்பது, உள்ளுறை. (12)

13\. புள்ளின் வாய் கீண்டானை * பொல்லா வரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய் *
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று *
புள்ளும் சிலம்பின காண் போதரிக் கண்ணினாய்!*
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால் *
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.

---

1. 'மனத்துக்கினியானை' என்றதொடர்க்கு நட்பினர் நொதுமலாளர், பகைவர் ஆகிய மூவகையினர் மனத்துக்கும் இனியவன் என்று பொருணயம் காணலாம். கங்கைக் கரையில் வாழ்ந்த குகன் தபோதனர் இவர்கள் மனத்துக்கு இனியனாயிருந்ததோடு, பகையாய் வந்த சூர்ப்பணகைக்கும் வாலிக்கும் இராவணனுக்கும் கூட இனியனாயிருந்தானன்றோ! எங்ஙனமெனில்,மூக்கும் காதும் வெம்முரண் முலைக்கண்களும் முறையாலிழந்து அரற்றிய சூர்ப்பணகையும் 'போக்கினீர் என்நாசிபோய்,த்து என்?' என்றும், 'மேக்குயரும் நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றோ?' என்றும், 'பிழைசெய்தீரோ?' என்றும் கூறியது அவ்வளது கொடிய மனத்துக்கும் இனியனாயிருந்ததாலன்றோ? மார்பில் இராமபாணம் பாய்ந்து இராமனை ஏசலுற்ற வாலி, 'ஓவியத்தெழுதவொண்ணா வுருவத்தாய்' என விளித்துப் பின்னர் 'ஆவிபோம் வேலைவாய் அறிவுதந்தருளினாய்' என்றும் செப்பியது வாலிமனத்துக்கு இனியனாயிருந்ததாலன்றோ? முதல்நாட் போரில் தோற்ற இராவணன், மாலியவானிடம் வந்து 'நாசம்வந்துற்றகாலை நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்று சொல்லி, "இராகவன் மேனி நோக்கித் தீயெனக்கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால், நாயெனத் தகுதுமன்றே காமனும் நாமுமெல்லாம்" என்று கூறியதும், பகைவனும் கொண்டாடும் மனத்துக்கினியான் என்பதை விசதமாக்குவதன்றோ. மண்டோதரி, தன் கணவனைக்கொன்ற இராமனிடத்துப் பெரும்பகைமை கொள்ளவேண்டியிருப்ப, அதற்குமாறாக அழுது அரற்றும்போது, "ஆராவமுதாய் அலைகடலிற கண்வளரும், நாராயண னென்றிருப்பேன் இராமனை நான், ஓராதே கொண்டகன்றாய் உத்தமனார் தேவிதனைப், பாராயோ நின்னுடைய மார்பகலம் பட்டவெலாம்" என்று பேசியது, அவள் மனத்துக்கு இராமன் சாக்ஷாத் நாராயணனுக இனியனாகியதாலன்றோ!

(இ-ள்.) புள்ளின் வாய் கீண்டானை - பறவையினுருவத்தைக் கொண்டுவந்த பகாசுரனுடைய வாயைப் பிளந்தவனும், பொல்லா அரக்கனை கிள்ளி களைந்தானை-(பிராட்டியைப் பெருமாளோடு இருக்கவொட்டாமற் பிரித்துப்) பெரும் பொல்லாங்கு செய்த இராவணனுடைய (பத்துத்) தலைகளையும் மிகவும் எளிதாக அறுத்து (ப் பந்துமித்திரர்களோடு ஒருசேர) அழித்தவனுமான பெருமானது, கீர்த்திமை - வீரசரிதங்களை, பாடி-பாடிக் கொண்டு, போய் - (அதுவே தாரகமாகச்) சென்று, பிள்ளைகள் எல்லாரும்-(நாம் எழுப்பும்படி நம்மிலும்) பருவத்திற் சிறியவருமுள்பட எல்லாச் சிறுமியரும், பாவை களம்-நோன்புக்கு என்று ஏற்பட்டுள்ள ஸங்கேதஸ்தலத்துக்கு, புக்கார்-சென்று சேர்ந்தார்கள்: (என்று இவ்வளவு கூறிய பின்பு, உறங்குபவள் பொழுது விடிந்து விட்டதோ? என்ன, அதற்கு எழுப்புபவர்கள் மறுமொழி சொல்லுகிறார்கள்:)—வெள்ளி எழுந்து-சுக்கிரன் உதித்து, வியாழம் உறங்கிற்று-பிருகஸ்பதி யென்னும் கிரகம் ஆஸ்தமித்துவிட்டது; (அன்றியும்), புளளும் சிலம்பின - (கூட்டிலிருந்து வெளியே சென்ற) பறவைகளும் (இரைதேடுகின்ற இடங்களில்) ஒலித்தன: போது அரி கண்ணினாய்-தாமரைப்பூவையும் மானையும் ஒத்த கண்களை யுடையவளே! பாவாய்-பதுமை போன்றவளே! நீ—, நல் நாள் - நல்லநாளில் [கிருஷ்ணனோடு சேர்ந்திருக்கும் பாக்கியத்தைப் பெறும் நாளில்], கள்ளம் தவிர்ந்து - (கிருஷ்ண சரிதத்தை நினைத்துக்கொண்டு தனியேகிடக்கையாகிற,) கபடத்தை விட்டு, கலந்து - (எங்களோடுங்) கூடி, குள்ளக் குளிர-உடம்பு வவ்வலிடும்படி, குடைந்து-துளைந்து விளையாடி, நீராடாதே - ஸ்நாநஞ் செய்யாமல், பள்ளி கிடத்தியோ - படுக்கையிற் கிடப்பாயோ? (இவ்வாறு கிடப்பது தகுதியன்று; ஆகையால், எழுந்திராய்); (எ-று.)

'நம் கண்ணழகுக்குத் தோற்று க்ருஷ்ணன் தானே வரட்டும்' என்ற எண்ணத்தோடு அப்பரமனுடைய வீரசரித்திரங்களைத் தியானித்தபடி படுத்திருக்குமவளை, இதனால் எழுப்புகிறார்கள்.[1] 'பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்' என்றதனால், முந்துற உணர்ந்தவர்களிற் சிறிது வயசு ஏறினவர்கள் மற்றவர்களையெழுப்பிக்கொண்டு வருகையில், எழுப்பப்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து நோன்புக்குச் செல்கின்றனரென்பதும், அவர்களும் மற்றவர்களை யெழுப்பிக்கொண்டு போவர்களென்பதும் வெளியாம். பாவைக்களம் - காத்யாயனியின் உருவத்தை மணற்கொண்டு செய்துவைக்கும் இடம் என்னலாம். மழைக்காக இந்திராணியையும், ஸம்ஶ்லேஷார்த்தமாக [பகவானோடு சேர்க்கையுண்டாக்கும் பொருட்டு] ரதியையும் நோற்கைக்குப் பெண்கள் திரளுமிடம் என்றுங் கூறுவர். கீழ் இராமனது கீர்த்தியை மாத்திரம் பாடினவர்கள் இங்கே கிருஷ்ணனுடைய வீரசரிதத்தையும் சேர்த்து

---

1. இதற்கு ஆதாரம் 'போதரிக் கண்ணினாய்' என்ற விளியும், 'பள்ளிக் கிடத்தியோ' என்ற சொற்றொடருமாம்.

இராமனது வீரசரிதத்தைப் பாடுகின்றனர்.[1] 'அரக்கனைக் கிள்ளிக்களைந்தானை' என்று இராவணனை அநாயாசமாக நிரஸித்த வீரத்தை விளக்கினர். 'பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந் தான்' என்றதில், நல்லரக்கனாகிய அவன் தம்பி விபீஷணனுக்கு அபயமளித்து இராச்சியம் முதலியன தந்து பாதுகாத்தா னென்ற பொருள் தொனிக்கும்.[2] வெள்ளியெழுதலே பொழுது விடிந்தமைக்குச் சூசகம்: கோதையார் வாழ்ந்த காலத்து வெள்ளி யெழுதலோடு வியாழனத்தமித்தலும் நிகழ்ந்ததாதலால் அதனை யும் சேர்த்துக் கூறினரென்ப. ஆறும்பாசுரத்தில் 'புள்ளுஞ் சிலம்பின' என்று கூறி, இத்தனை நேரஞ்சென்ற பின்பு பதின்மூன் றும் பாட்டிலும் அத்தொடரையே கூறியதனால், அதனிலும் இதற்கு வேறுபாடு விளங்க, இரைதேடும் இடங்களிற் பறவை கள் ஆரவாரஞ் செய்வதைக் காட்டுமெனக் கொள்க. அரி-மான். 'போதரிக் கண்ணினாய்' - தாமரைப்பூவில் வண்டுபடிந்தாற் போன்ற கண்களையுடையவளே! என்றும், தாமரைமலரின் அழகை அரித்தலை [கவர்தலை] யுடைய கண்ணழகை யுடைய வளே! என்றுமாம்: போது-கருங்குவளையுமாம்.[3]

நமக்கு ஸ்வரூபஜ்ஞானமுண்டாகில், அவன் தானே வருகிறா னென்று ப்ராப்யத்வரையையொழித்துத் தனியே பகவத் குணானுஸந்தானம் பண்ணும் பாகவதரை, 'நீர் எம்முடன் கூடி நெஞ்சு குளிரும்படி பகவதநுபவம் பண்ணாமல் தனியே போஷி யைக் கவர்ந்து செல்லலாமோ?' என்று உணர்த்துவது, இப் பாசுரத்தின் உள்ளுறை. (13)

---

1. இதற்குக் காரணம் கூறியதுகூறலாகுமென்ற கருத்து ஒழித்தற்காகத் தங்களுக்குப் பள்ளமடையான க்ருஷ்ணாவதார வரலாற்றையொக்கக் கூட்டிப் பேசுகின்றனர். 'கீர்த்திமை பாடிப் போய்' என்றமையால், இந்தப் பெண்களுக்கு வழிநடக்கும் வருத் தந்தீர வழிச்சோறாக உதவுகின்றது, இவன் கீர்த்திமை என்ற படி.

2. இங்கு, இராவணனைப் 'பொல்லா வரக்கன்' என அடை கொடுத்துப் பேசியுள்ளாள் கோதை. உயிரையும் உடலையும் கூறுபடுத்தும் யமனைப்போலப் பஞ்சனைச் சிவக்குமென்காற் றேவியைப் பிரித்த மாபாவியாதலின், 'பொல்லா' என்ற அடை சாலப் பொருந்தும். அன்றிக்கே, செய்த குற்றம் அற்பமாயிருந் தால், இன்ன குற்றஞ் செய்தானென அறுத்துக் காட்டலாகும். நாக்கூசுமாறு சொல்லொணாத குற்றத்தைச் செய்தவனன்றோ! ஆதலின், 'பொல்லாதவன்' எனச் சொல்லுமத்தனையே யொழிய வேறு என் சொல்வது!

3. பூவிற் படிந்த வண்டை மகளிர்கண்ணுக்கு உவமை கூறும் மரபை-"தாட்கருங் குவளை தோய்ந்த தண்ணறைச் சாடி யுட்டன், வாட்கணி னிழலைக் கண்டாள் வண்டென வேர்ச்சு இன்றாள்" என்ற கம்பன் பாடலாலு முணர்க.

14. உங்கள் புறங்கடைத் தோட்டத்து வாவியுள் *
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்*
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்*
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்*
எங்களை முன்ன மெழுப்புவான் வாய்பேசும் *
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய் ! *
சங்கொடு சக்கர மேந்தும் தடக்கையன் *
பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) உங்கள் புறங்கடை - உங்களுடைய புறங்கடையிலேயுள்ள, தோட்டத்து - தோட்டத்திலிருக்கிற, வாவியுள் - வாவியிலே, செங்கழுநீர்-செங்கழுநீர்மலர்கள், வாய் நெகிழ்ந்து- மலர்ந்து, ஆம்பல் - ஆம்பல்மலர்கள், வாய்கூம்பின - வாய் குவிந்தன; செங்கல்பொடி கூறை-காவிக்கற்பொடியில் தோய்த்த காஷாய வஸ்திரத்தையும், வெள் பல்-வெண்ணிறமான பற்களையுமுடைய, தவத்தவர் - துறவிகள், தங்கள் திருக்கோயில் - தங்களுடைய கோயிலிலே, சங்கு இடுவான் - சங்கிடும்பொருட்டு, போகின்றார் - போகின்றார்கள்; எங்களை—, முன்னம் எழுப்புவான் - முன்னே வந்து எழுப்பும் பொருட்டு, வாய் பேசும் - வாயினால் (டம்பமாகச்) சொல்லுகின்ற, நங்காய்-நங்கையே! நாணாதாய்- வெட்கமற்றவளே! நா உடையாய் - நாவுடையவளே! சங்கொடு சக்கரம் ஏந்தும் - சங்க சக்ரங்களை யேந்தியுள்ள, தட கையன்- பெரியகைகளை யுடையவனும், பங்கயம் கண்ணானை - தாமரை போன்ற கண்களை யுடையவனுமான க்ருஷ்ணனை, பாட - பாடுதற்கு, எழுந்திராய் - எழுந்திரு; (எ-று.)—காண்-முன்னிலையசை. 'உங்கள் புழைக்கடை' என்றும் ஓதுவர்.

இப்போது பொழுதோ நன்றாக விடிந்துவிட்டது: 'அதை எப்படியுணரலாம்? நிலாவெளிச்சத்தால் அப்படித்தோன்றுகின்றது' என்பாயானால்—அதையுணர வெகுதூரம் போக வேண்டியதில்லை: உங்கள்வீட்டுப் புறங்கடையில் செங்கழுநீர் மலர, ஆம்பல் குவிந்ததையேனுங் காணக்கூடாதா? அன்றியும், தாமஸராய்க் காஷாயவஸ்திரந்தரித்த பண்டாரங்களும் தங்கள் கோயிலிற் பூஜைக்குச் சங்குஊதப்போவதையுங் காணலாமே; எங்களையெல்லாம் வந்து எழுப்புவதாகச்சொல்லி இன்னும் படுத்திருக்கிறாயே! உனக்கு வாய்டம்பந்தான்; காரியத்தில் மிகவுஞ் சோம்புகின்றாயே; ஸ்ரீ க்ருஷ்ணனைப்பாடும்படி யெழுந்திருப்பாயாக வென்பதாம். வெண்பல்-தாம்பூலந்தரியாமையால் வெண்மையான பல். 'உங்கள்புறங்கடை' என்று தங்களோடு கூட்டிக் கொள்ளாமற் சொல்லுகிறது-அவளிடத்துள்ள இன்னாப்பினாலாகும்.[1] வாவி = வாபீ. தவத்தவர் என்பதை வைஷ்ணவஸ்ந

1 நங்காய்! என ஒருமைப்பாலில் விளித்து, 'உங்கள் புறங்கடை' என்று பன்மைப்பாற்சொல் சேர்த்துச் சொல்லியது, பால்வழுவமைதி; ஒருமைப்பன்மைமயக்கம் எனினுமாம்.

யாஸிகளென்றே கொள்வதுமுண்டு. கோயில்களில் கதவைத் திறக்கும்போது மங்களவாச்சியம் முழக்குதல் மரபு ஆதலால், 'கதவைத்திறக்க' என்கிற பொருளில் 'சங்கிடுவான்' என்றது: சங்கிடுதல் - மங்கலச்சங்கை ஊதுதல்: இது பின்பு நிகழும் பூஜைக்கு உபலக்ஷணம். சங்கு-ஸங்கு என்பதன் திரிபெனக் கொண்டு, திறவுகோலிட்டுத் திறக்கவெனினுமாம். நாவுடையாய்-நாவினால் இனிமையாகப்பேசுபவளே! என்றுமாம்.

§வாய் பேசும்-செயலிலில்லையே என்றபடி. க்ருஷ்ணனோடே பழகின உனக்குப் பொய்சொல்லுகை வம்போ என்றனர் வியாக்யாதா. நங்காய்-இகழ்ச்சி குறிப்பது: சொல்லும் செயலும் சேராதார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ? என்ற கருத்தது.

பாகவதஸமுதாயங்கட்கெல்லாம் ப்ரதானராய்ப் பலர்க்கும் பகவத்ஸம்பந்தத்தை யுண்டாக்கும் ஜ்ஞாநபக்தியாதிகளை யுடைய பாகவதரை யெழுப்புவது, இப்பாசுரத்திற்கு உள்ளுறை. நீங்கள் மகிழ்தற்குக் காரணமான திருமந்த்ரத்திலுள்ள நமஸ்ஸிலே பாரதந்த்ர்யம் விளங்க, ஸ்வாதந்த்ர்யம் ஒடுங்கிவிட்டது; பக்தியினால் ஶேஷத்வஜ்ஞாநமுடையராய் மகிழ்கிற ப்ரபந்நாதிகாரிகளும் திருவாராதனத்துக்குப் போனார்களென்பது, முதனான்கடிகளின் கருத்து. (14)

15. எல்லே யிளங்கிளியே! இன்னம் முறங்குதியோ? *
சில்லென் றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்*
வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்*
வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக *
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை? *
எல்லாரும்போந்தாரோ?போந்தார்போந் தெண்ணிக்கொள்*
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை *மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) எல்லே-என்ன ஆச்சரியம்! இளங்கிளியே-இளமையான கிளிபோன்ற பேச்சினிமையுடையவளே! இன்னம்-இன்னமும், உறங்குதியோ-உறங்குகின்றாயோ? (என்று எழுப்பப் போனவர்கள் சொல்ல),—'நங்கைமீர்-பூர்ணர்களே! சில் என்று-சிலுசிலுவென்று, அழையேன்மின்-அழையாதேயுங்கள்; போதர்கின்றேன்-(இதோ எழுந்து) வருகின்றேன்,' (என்று எழுப்பப்பட்டவள் சொல்ல, மீண்டும் எழுப்புகின்றவர்கள்),'உன் கட்டுரைகள்-உனது கட்டிச் சொல்லும் வார்த்தைகளினால், (நீ), வல்லை-ஸாமர்த்திய முடையவளாயிருக்கிறாய் (என்பது நன்கு விளங்குகின்றது); பண்டே - முன்னமே, உன்வாய் - உனதுவாயை, அறிதும்-அறிவோம்,' (என்ன,— மீண்டும் எழுப்பப்பட்டவள்) 'நீங்களே-நீங்கள் தாம், வல்லீர்கள்-ஸாமர்த்தியசாலிகள்; நானே தான் ஆயிடுக-நானே ஸாமர்த்தியசாலியாயிருந்தாலும் இருக்கட்டும் (என்ன,— மீண்டும் - எழுப்புகிறவர்கள்), உனக்கு வேறு உடையை என்ன-உனக்கென்று வேறுபாடு தனியேகொண்டிருக்கின்றாயே இது என்? (என்றுசொல்ல, அவளும்), 'எல்லாரும் போந்தாரோ-எல்லாரும் வந்துவிட்டார்களோ!' (என வினவ,

இவர்களும்), 'போந்தார்-வந்துவிட்டார்கள்: போந்து எண்ணிக் கொள்-எழுந்துவந்து கணக்கிட்டுக்கொள்; வல் ஆனை கொன்றானை-வலிய குவலயாபீடமென்ற யானையைக் கொன்றவனும், மாற்றாரை மாறு அழிக்க வல்லானை-பகைவரை எதிராகநின்று அழிக்க வல்லவனும், மாயனை-மாயனுமாகிய ஸ்ரீ கிருஷ்ணனை, பாட-பாடும்பொருட்டு, ஒல்லை நீ போதாய்-விரைவாக நீ எழுந்து வருவாய்' (என்கிறார்கள்); (எ-று.)—"போதருகின்றேன்" என்றும் ஓதுவர்.

"நங்காய்! எழுந்திராய்...பங்கயக்கண்ணானைப்பாட" என்று அசலகத்துப் பெண்பிள்ளையை யெழுப்பியதுகேட்ட ஒருத்தி அந்தச் சொல்லின் இனிமையிலீடுபட்டுத் தன்மிடற்றினாற் பாட, அவளை அந்தக்குரலின் இனிமையினால் 'எல்லே இளங்கிளியே!' என்று சொல்லி எழுப்பினார்கள்: 'நாணாதாய் நாவுடையாய்' என்று அசலகத்துப் பெண்பிள்ளையை யெழுப்பினவர்கள் இவ்வாறுசொல்லக் காரணமிருக்கவேணுமென்று எழுப்பப் பட்டவள் பேசாதே கிடக்க, 'நாங்கள் வருவதற்கு முன்பு நீ உறங்கினாலும் உறங்கலாம்: நாங்கள் இத்தனைபேரும் க்ருஷ்ண விரஹத்தாலே துவண்டு உன்னுடைய குளிர்ந்தநோக்கத்தைப் பெறுவது எப்போது? என்று உனது வாசலிலே நிற்கையில், இன்னும் உறங்குதல் தகாது' என்பார் 'இன்னமுறங்குதியோ?' என்றார்கள்; இவ்வாறு இவர்கள்சொல்லியது தனது அநுசந்தானத்துக்குத் தடையாயிருந்ததனால் படுத்திருப்பவள் 'சில்லென்றழையேன்மின்' என்றாள். 'எங்கள் சொல்காதிற்படுவதும் பொறுக்கமுடியாதபடி உனக்கு வந்துள்ள பூர்த்திஎன்?' என்று எழுப்புகிறவர்கட்கு எண்ணமாக, படுத்திருப்பவள் 'நீங்கள் பெரியவர்கள்: பேசாதிருந்தாற்போதும்; நான் வருகிறேன்' என்று நிஷ்டூரமாகக்கூறியதனால், எழுப்புபவர்கள் 'நீ செய்வதெல்லாம் செய்துவிட்டு எங்கள்மீது நிஷ்டூரமாகச் சொல்லவும் வல்லையென்பது முன்னமே எங்கட்குத் தெரியும்' என்ன, படுத்திருப்பவள் 'இன்னம் உறங்குதியோ?' என்றும், 'வல்லையுன் கட்டுரைகள்' என்றும் வெட்டெனப்பேசியது உங்கள் பேச்சன்றோ!' என்ன, 'சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன் என்று நீ வெட்டெனப்பேசவில்லையோ?' என்று எழுப்புபவர்கள் சொல்ல, படுத்திருப்பவள் 'நம்முடையவார்த்தையைக் கேட்டு மகிழ்பவள் நம்முடையபேச்சும் அலக்ஷ்யமாம்படி க்ருஷ்ணாநுபவத்திலே ஈடுபட்டிருக்கின்றாளே! என்று உகக்கவேண்டியிருக்க, அது செய்யாதது உங்கள்மேலேயன்றோ குற்றம்' என்று சொல்லிவிட்டு, சற்று ஆலோசித்து, "இல்லாத குற்றத்தை நம்மீது ஒருவர் ஏறிட்டுச் சொன்னாலும், அதை மறுத்துச் சொல்லாமல் நம்மதே குற்றமென்று இசைவதே ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்" என்ற ஞானம் பிறந்து, 'நானே தான் ஆயிடுக' என்று தன்குற்றமாக இசைகின்றனள்.[1] (பாகவதவிஷயத்தில் இருக்க

1 பரதன் இராமன் வனமேகிய விஷயத்தில் பிழையைத் தன்னதாக உடன்படவில்லையோ: "மூன்றுலகும் ஈன்றானை முன்னீன்றானைப் பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான் பிறத்தலாற்றுறந்த பெரியாள்" என்றதுங்காண்க. குற்றஞ்சாட்டிய

வேண்டிய நியதி இன்னபடி யென்பது இவ்வாறு வெளிப்படுத்தப்பட்டிருப்பதனால் தான், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் "திருப்பாவையாகிறது-இப்பாட்டிறே" என்று அருளிச்செய்தது. இப்பாசுரம்போலவே எங்கும் வினாவிடையாக வரவேண்டுமெனவும் கூறுப.) 'இனிச் செய்யவேண்டுவதுஎன்?' என்று உறங்குமவள் கேட்க, 'உனக்கு என்று தனியே க்ருஷ்ணாநுபவம் கூடுமோ? எங்களோடு வந்து சேர்க' என்ன, 'எல்லாரும் வந்திட்டார்களோ?' என்று படுத்திருப்பவள் வினவ, எழுப்புகிறவர்கள், 'போந்தார்போந்தெண்ணிக்கொள்; மாயனைப்பாட ஒல்லை நீ போதாய்' என்கிறார்கள்.

எல்லே-பொழுதுவிடிந்தபின்பும் உறங்குவது பற்றிய வியப்பைக் காட்டுமென்றுமாம். எங்களை ஸ்ரீ கிருஷ்ணனுடன் சேரவொட்டோமென்றிருந்த இடையர்களையே தமது அபிமானத்தைப் போக்கிச் சேர அநுமதிகொடுக்கச்செய்தவனென்பது, 'வல்லானை கொன்றானை மாற்றாரைமாற்றழிக்கவல்லானை' என்ற தொடரில் தொனிக்கும். கீழ் "குள்ளக்குளிரக்குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ?" என்று எழுப்புகிறவர்கள், 'எழுந்திராய் பங்கயக்கண்ணானைப்பாட' என்றும், 'எழுந்திராய்...மாயனைப்பாட' என்றும், இவ்வாறு கூறலாமோ? எனின்—நீராடுதல் போலவே பங்கயக்கண்ணனாகிய மாயனைப்பாடுதலும் நோன்புக்கு அங்கமாதலால் ஆகும்; அன்றியும், உள்ளுறையில் நீராடுதல் என்பது க்ருஷ்ணனோடு சேர்ந்திருத்தலே யாதலாலும் தகுமென்பர்.

பாகவதர்கள் விஷயத்தில் நடந்துகொள்ளவேண்டிய நியதி இன்னதென்பதை யறிந்திருப்பாரொருவரை, ஸ்வயத்நத்தாற் போக்க அரியவாய்ப் பிராயச்சித்தத்தாலும் போக்க வரியனவான அஹங்காரத்துக்கும் காமக்ரோதாதிகளுக்கும் நிவர்த்தகனைப் பாடுமாறு எழுப்புவது, இப்பாசுரத்திற்கு உள்ளுறை. வைஷ்ணவர்களை விட்டிட்டுத் தான் தனியே பற்றுகின்ற பகவத்விஷயம் தேவதாந்தரத்தோடு ஒக்கும் என்றகருத்தும் இதில் தோன்றும்.()

16. ‡‡நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே! * கொடித்தோன்றும் தோரண
வாயில்காப்பானே! *மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமியரோமுக்கு *அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்*
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான் *
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே யம்மா! * நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

---

பாகவதரின் பேச்சுக்கும் கௌரவங்கொடுத்தலின் நிமித்தம் அவர் கூறிய குற்றத்தைத் தான் இசைந்துகொடுகிற்றல் வைஷ்ணவஸ்வரூபமாம் என்பது புலப்படும்.

(இ-ள்.) நாயகன் ஆய் நின்ற-தலைவராக இருக்கின்ற, நந்த கோபனுடைய-ஸ்ரீ நந்தகோபருடைய, கோயில்-அரண்மனையை, காப்பானே-காப்பவனே! கொடி தோன்றும்-த்வஜங்கள் காணப் படுகின்ற, தோரணம்-தோரணங்களையுடைய, வாயில்-வாயிலை, காப்பானே-காப்பவனே! ஆயர் சிறுமியரோமுக்கு-இடைச்சிறு மியரான எங்களுக்காக, மணி கதவம்-மணிகள் கட்டிய கதவின், தாள் திறவாய்-தாளைத் திறப்பாயாக: மாயன்-மாயனும், மணி வண்ணன் - நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடையவனுமான க்ருஷ்ணன், பறை-சப்திக்கின்ற பறையை(க்கொடுப்பதாக), நென்னலே-நேற்றே, வாய்நேர்ந்தான் - வாக்குக்கொடுத்திருக் கிறான்; துயில் எழ பாடுவான்-திருப்பள்ளியினின்றெழும்படி பாடும்பொருட்டு, தூயோம் ஆய் வந்தோம்-பரிசுத்தர்களாக வந்துள்ளோம்; அம்மா-ஸ்வாமி! வாயால்-வாயினால், முன்னம் முன்னம்-முதன்முதலில், மாற்றாதே-தடுக்காதே; நீ—,நேயம் நிலை-(ஒன்றோடொன்று) சேர்ந்ததான தன்மையையுடைய, கதவம்-கதவை, நீக்கு-திறப்பாயாக ; (எ-று.)

இதுமுதல் ஏழுபாசுரங்கள் ஆய்ச்சிறுமியர் எல்லோரும் திரண்ட பின்பு, ஸ்ரீ கிருஷ்ணனை எழுப்பக் கோலி, அங்கு உள்ள வர்களையும் கிருஷ்ணனையும் துயிலெழுப்புவதைக் காட்டும். இத னால், ஸ்ரீகிருஷ்ணனை யெழுப்பவிரும்பிய கோபியர் நந்தகோபர் மாளிகைக்குச் சென்று, கோயில்காப்பானை யெழுப்பி, பின்பு வாயில்காப்பானை யெழுப்புகிறார்கள். 'நாயகனாய் நின்ற' என் பதை, கோயில்காப்பானுக்கு அடைமொழியாக்கினுமாம். தமக்கு உபகாரகனாகையால், இடைச்சிறுமியர் இவனை நாயகனென்றது; ப்ரதானசேஷியைக் காட்டிலும் அவனுக்கு வழிகாட்டிகளே இவர்களுக்குச் சிறந்த சேஷிகள்: (ததீயரை முன்னிட்டே பகவா னைப் பற்றவேணுமென்ற சாஸ்த்ரார்த்தம் இங்கு வெளியாம்.) இதனால், கீழ் 'செய்யாதன செய்யோம்' என்ற பிரதிஜ்ஞையை நிறைவேற்றினார்கள். 'கிருஷ்ணனுடைய கோயில் என்னாது நந்தகோபனுடைய கோயில்' என்றது-தான் பரதந்த்ரனென்பது நன்கு தோன்றுவதற்காகவே ஸ்ரீக்ருஷ்ணன் இங்குத் திருவவ தரித்துள்ளானாதலால்; பரமபதமும் 'அடியார்நிலாகின்றவைகுந்தம்' என்று அடியாருடைய அதீனமாகவே யிருக்குமென்க. எளிமைப் பட்டு அடைந்தோரைக் காப்பதற்காகவே நந்தகோபன் கொடி கட்டித் தோரணமும் நாட்டியுள்ளானென்பது, இங்குத் தோன் றும். இடைச்சிறுமியர் 'கோயில்காப்பானே வாயில்காப்பானே!' என்று விளிக்கின்றது - சிறுவராகையால் வேறுவகையாக அழைக்க அறியாமையினாலென்றுமாம்; அன்றி, இவ்வாறு சொல்லி விளிப்பதே அவர்கட்குத் திருப்தியாயிருக்குமென்ற காரணத்தினாலுமாம். (இங்கே, அடிமைத் தொழிலைப்பற்றி வரும் பேரே ஆத்மாவுக்குச் சிறந்தபெயரென்றவிஷயம் ஏற்படும்.)மாயன்- இடைச்சிறுமியர்க்குச் சுவாதீனமானவன்: மணிவண்ணன் - அப் படியிராவிட்டாலும் விடமுடியாத வடிவழகு உடையவன்.[1]

1. ஒருநாள் முகத்திலே விழித்த ஆடவர்களையே வடி வழகு படுத்தும்பாட்டை ஸ்ரீவசனபூஷணவியாக்யானத்திற் கண்

‘கோயில்காப்பான்’ என்றது-வெளிவாசற்காப்பானையும், ‘வாயில் காப்பான்’ என்றது - உள்வாசற் காப்பானையுங் காட்டும்: இருவரும் ஒருவரே என்றலு மொன்று. தோரணம்-கட்டுவாயில் என்பது ஏற்கும். மணிக்கதவம்-ரத்நங்களழுத்திய கதவுமாம்.[1]

‘சூர்ப்பணகை பூதனைகளால் நேர்ந்ததுபோல் எங்களாலும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு என்ன தீங்குநேருமோ? என்று அஞ்ச வேண்டா: சிறிதும் கபடமில்லாத இடைச்சிறுமியர் நாங்கள்.[2] எங்களுக்கு மனதிற் களங்கமில்லை’ என்பதற்காக, ‘ஆயர்சிறுமியரோம், தூயோமாய் வந்தோம்’ என்கிறார்கள். ‘பெண்களாயிருந்து இரவெல்லாம் வந்து இப்படி உபத்திரவிப்பாருண்டோ? அப்பாற்போங்கள்’ என்று சொல்லுவான்போல வாயில்காப்பானிருந்ததனால், ‘வாயால் முன்னமுன்னம் மாற்றாதே யம்மா’ என்கிறார்கள். இந்த இனிய சொல்லைக் கேட்டதனால், வாயில் காப்பான் மனங்கசிந்து இடைச்சிறுமியர்மீது கருணைகொண்டு இரக்கத்தோடு, ‘ஆயின், கதவை நீங்கள் திறந்துகொண்டு செல்லுங்கள்’ என்று குறிப்புக்காட்ட, ‘இக்கதவு உன்னைக்காட்டிலும் மிகவும் எம்பெருமான்பக்கல் அன்புகொண்டு அழுத்தமாக இருக்கின்றது; அபலைகளான எங்களால் இது திறக்கப் போகாது; நீயே திறப்பாய்’ என்கிறார்கள்.[3] நேசமான நிலையையும் கதவையும் திற என்று பொருள்கூறி, நிலையில் [வாசற்காலில்] நின்று கதவை விலகச்செய் என்று கொள்ளுதலும் ஒன்று.

§ நென்னலே - ஏகாரத்திற்குத் தாற்பரியம் என்னையெனில், ‘உன்காலைப் பிடிக்கவேண்டுகிற இன்றுபோலேயோ அவன் காலைப் பிடிக்க இருந்த நென்னேற்றும்; ஒருநாளே! என்கிறார்கள்’ என்பது. வாசல்காப்பானை ‘அம்மா!’ என்றது, ‘உள்ளிருக்கிறவனே நாதன்? நீயல்லையோ?’ என்ற பாவந்தோற்ற.

‘நந்தகோபனுடைய’ என்ற இடத்து வெண்டளை பிறழ்ந்து வந்தது. இங்ஙனம் தளை தட்டாமைக்காக ‘நந்தகோபன்னுடைய’ என்று விரித்தல்விகாரமாக்கி யுரைக்கவேண்டா; வெண்டளையால் வருங் கலிப்பாவில் சிறுபான்மை மாறிவருதலுமுண்டு என்று யாப்பருங்கலவிருத்தியிற் கூறியிருப்பதும், “வெள்ளையிற் பிறதளைவிரவாவல்லன, எல்லாத்தளையும் மயங்கியும் வழங்கும்” என்று யாப்பருங்கலத்திலேயே கூறியிருப்பதும் முதலியன காண்க; தொல்காப்பியத்திலும் இக்கருத்துக் காணக்கிடக்கின்றது. அன்றியும், “உலகியற் செய்யுட் கோதிய

---

டோமென்னில், சதாசர்வகாலமும் கண்ணன் திருமுகத்தையே மறவாது கண்டு நினைந்து வாடும் ஆயர்மகளிரை இவன் வடிவழகு படுத்தும்பாட்டைச் சொல்லவும் வேண்டுமோ!

1. புகுவாரைத் தன்னழகாலே காற்கட்டுங்கதவு.

2. இவனுக்கு என் வருகிறதோ என்று வயிறுபிடிக்கும் இடையர்க்குப் பிறந்தவர்கள்.

3. திருவாய்ப்பாடியில் அசேதநவஸ்துவாகிய கதவுகூட கண்ணன்மாட்டு அநுகூலமாயிருப்பதே!

வளைவையாற், குறையவும் விதப்பவும் குறையாவாற்றல், இருடி கண்மொழிதலி ஞரிடமென்ப", "ஆரிடச் செய்யுள் பாடுதற்குரியோர், கற்றோரறியாவறிவுமிக்குடையோர், மூவகைக்காலப் பண்புமுறையுணரும், ஆற்றல்சான்ற வருந்தவத்தோரே" என்று காட்டி, 'பொய்கையார் வாக்கு முதலியவை ஆரிடவாக்கு' என்றும் அவ்யாப்பருங்கலவிருத்தியிற் கூறியது கொண்டு, செய்யுளிலக்கணம் பிறழ்தல்காரணமாகப் பாசுரங்களைத் திருத்த வேண்டிய அவசியமில்லை யென்பதை உணர்க.

எல்லாப் பாகவதர்களும் திரண்டு, ஆசார்யனைக் கிட்டச் சென்று ஆசார்யஸம்பந்தத்தை யுண்டாக்கப் புருஷகாரமாயிருப்பவர்களை யுணர்த்துதல், இப்பாசுரத்திற்கு உள்ளுறை. ஆசாரியனைத் தொழுகைக்குமுன் அவனிடத்துத் தம்மைச்சேர்த்தாரையும் பணிவது பெரியோர் செயலென்பது, இங்குவிளங்கும். கோயில்காப்பான்-திருமந்திரத்தை அதிகாரிகளல்லாதார் காதிற் படாதபடி பாதுகாப்பவன். (16)

17. அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும் *
எம்பெருமான்! நந்தகோ பாலா! எழுந்திராய் *
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே ! *
எம்பெரு மாட்டி ! யசோதாய்! அறிவுறாய்*
அம்பர மூடறுத் தோங்கி யுலகளந்த *
உம்பர்கோ மானே ! உறங்கா தெழுந்திராய் *
செம்பொற் கழலடிச் செல்வா ! பலதேவா ! *
உம்பியும் நீயு முறங்கேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) அம்பரமே-வஸ்திரத்தையே, தண்ணீரே-தண்ணீரையே, சோறே-சோற்றையே, அறம் செய்யும் - தருமஞ் செய்கின்ற, எம்பெருமான்-எமது தலைவனே! நந்தகோபாலா-நந்தகோபனே! எழுந்திராய்-எழுந்திருப்பாயாக; கொம்பு அனார்க்கு எல்லாம்-கொம்பையொத்த[இளைத்துள்ள]வர்களான பெண்டிர்க்கெல்லாம், கொழுந்தே-கொழுந்துபோன்றவளே! குலம் விளக்கே-புக்க குலத்திற்கு விளக்குப்போன்றவளே! எம்பெருமாட்டி-எமது தலைவியே! யசோதாய்-யசோதையே! அறிவுறாய்-எழுந்திராய்; அம்பரம் ஊடு அறுத்து-ஆகாயத்தை இடமறும்படி செய்து, ஓங்கி-உயர்ந்து, உலகு அளந்த-லோகங்களை யளந்து கொண்ட, உம்பர் கோமானே-தேவர்கட்குத் தலைவனே! உறங்காது-தூங்காமல், எழுந்திராய்-; செம் பொன் கழல்-செம்பொன்னினாலாகிய வீரக்கழலையணிந்த, அடி-பாதங்களையுடைய, செல்வா-ஸ்ரீமானே! பலதேவா-பலதேவனே! உம்பிஉம்-உன் தம்பியும், நீஉம்-நீயுமாக, உறங்கேல்-தூங்காமலெழுந்திரு; (எ-று.)

இதனால், நந்தகோபன் யசோதை க்ருஷ்ணன் பலராமன் என்ற இவர்களை எழுப்புகிறார்கள்.[1] அம்பரமே...நந்தகோபாலா-

1 'ஸ்ரீ நந்தகோபரையும் க்ருஷ்ணனையும்விடாத யசோதைப் பிராட்டியைப் போலே' என்று முமுக்ஷுப்படியிலருளிய முறைமையையும் கண்டு நினைக.

ஆடை முதலியவற்றுள் வேண்டுவார் வேண்டியதை வேண்டு மட்டும் கொடுத்தலால், 'வஸ்திரத்தையே கொடுக்கிறான்' 'தண்ணீரையே கொடுக்கிறான்' 'சோற்றையே கொடுக்கிறான்' என்று அதனை வேண்டிப்பெறுபவர்கள் சொல்லும்படியான நந்தகோபன் என்க. 'அம்பரமே' முதலியவற்றிலுள்ள ஏகாரம்-பிரிநிலை; எண்ணுப்பொருளனவாகக்கொண்டு, அம்பரத்தையும் தண்ணீரையும் சோற்றையும் என்னலுமாம்.[1] 'அறஞ்செய்யும்' என்பதில் புகழ்வேண்டிக் கொடுப்பவனல்லனென்பதும், 'அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும் எம்பெருமான்' என்பதில், 'எமக்கு உண்ணுஞ் சோறு முதலியனவாக ஆகும் கண்ணபிரானை எமக்கு உபகரிக்கப் போகின்றவனே!' என்ற புகழ்ச்சியும் தொனிக்கும். வாயில் காப்பவனால் அநுமதிபெற்று உட்புகுந்த பெண்கள் முதற்கட்டிற் படுத்திருந்த நந்தகோபரை யெழுப்பி அவனுடைய அநுமதி பெற்று, அங்குநின்று குழந்தைக்கு அருகே படுத்திருக்கும் யசோதையை யெழுப்பி அவளுடைய அநுமதிபெற்று ஸ்ரீகிருஷ்ணனை யெழுப்ப, ஸ்ரீ கிருஷ்ணன் எழுந்திராமையால் 'நாம் முறைகேடாக எழுப்பினோமல்லவா!'[2] என்று இப்பெண்கள் நினைந்து, 'பலதேவா! உம்பியும் நீயும் உறங்கேல்' என்று எழுப்புகிறார்களென்க. தங்களுக்கு இஷ்டனை ஸ்ரீகிருஷ்ணனைத் தங்கட்கே கொடுத்தமையால் யசோதையை 'எம்பெருமாட்டி!' என்றும், இடைச்சியர்க்கு வருத்தம் நேரிட்டால் முதன்முதலில் முகம்வாடுபவளாதலால், 'கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே!' என்றும் கூறுகிறார்கள். 'அசோதாய்' என்று பிரிப்பாருமுளர்.

ப்ரயோஜநாந்தரபரரும் ஆண்களுமாயிருந்தால்தான் உதவவேணுமோ? அநந்யப்ரயோஜநராய்ப் பெண்களுமாயிருந்தால் உதவலாகாதோ? நீ சிறுப்பதும் பருப்பதுமாக வேண்டியகாலத்தில்தான் உதவவேணுமோ? இருந்தபடியே முகங்காட்ட வேண்டுவதானால் முகங்காட்டி உதவலாகாதோ? என்பன-ஐந்து ஆறு அடிகளில் தோன்றும். ஸ்ரீக்ருஷ்ணன் திருவவதரிக்கும்படி தான் முந்துறத்தோன்றிய கால்நலத்தை யுடையவனென்பதற்காக 'செம்பொற் கழலடி' என்று பலதேவனுக்கு விசேஷணங் கொடுத்தது. 'படுக்கையில் உறங்குபவர்களுண்டு; உறங்குவாருடன் படுக்கையும் உறங்குமோ?' என்ற ரஸோக்தி, 'பலதேவா! உம்பியும் நீயும் உறங்கேல்' என்ற இடத்துச் சொல்லப்படும்: பலதேவன் நாராயணமூர்த்திக்குப் படுக்கையாகிய ஆதிசேஷனது அமிசமாவனென்பது, இங்குக் கருதத்தக்கது. கிருஷ்ண

---

1. முப்பத்திரண்டுவகை தருமங்களுள்ளே சிறந்த தருமங்கள் வஸ்திரதானம் தாரகமான நீர் அன்னதானம் என்பன பேறப்படும். ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாது வேண்டப்படுவன உணவும் உடையும் அன்றோ! "உண்பன நாழி உடுப்பன விரண்டே" என்ற புறமும் நோக்குக.

2. முந்துற நம்பிமூத்தபிரானை யெழுப்பாதது முறைகேடு. முறைகேடாக எழுப்பினரென்பது-'உம்பியும்நீயும்' என்ற அடைவில் கூர்ந்தறிக.

னைப்பெற்ற தாயாகி வசுதேவரது மனைவியான தேவகியின் கருப் பத்தில் ஆறுமாசம் இருந்து. பின்பு வசுதேவரது மற்றொரு மனைவியாகிய ரோஹிணி வயிற்றில் மாயையினுற் சேர்க்கப்பட்டு ஸ்ரீகிருஷ்ணனுக்கு முன்னமே பிறந்தானுதலால், பலதேவன் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அண்ணனுவன்.

அம்பரமென்பது - ஆத்மா பெறவேண்டிய பகவந்முகவிகாஸம். தண்ணீர் - பகவந்முகவிகாஸத்தை வளர்க்கவல்ல 'நான் போக்தா' என்னும் புத்தி தவிர்கை. சோறு - அதனுல் வருங் கைங்கர்யம்: இம்மூன்றையும் அளிப்பவன் ஆசார்யன். அப்படிப் பட்ட ஆசார்யனைப்பற்றித் திருமந்த்ரத்தின் பொருளை யுணர்ந்து எம்பெருமானுக்கு அந்தரங்கரை முன்னிட்டு எம்பெருமானை யுணர்த்துதல் சேதந ஸ்வரூபமென்பது, இப்பாசுரத்திறுள்ளுறை.

18. ‡‡உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன் *
நந்தகோ பாலன் மருமகளே ! நப்பின்னாய் ! *
கந்தம் கமழும் குழலீ !கடைதிறவாய் *
வந்தெங்கும் கோழி யழைத்தனகாண் * மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண் *
பந்தார் விரலி !உன் மைத்துனன் பேர்பாட *
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப *
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) மதம் உந்து களிற்றன் - மதஜலம்பெருக்குகின்ற யானையை யுடையவனும், ஓடாத தோள் வலியன் - (போரிலே ஒருவர்க்கும்) பின்னிடாத புஜபலத்தை யுடையவனுமான, நந்த கோபாலன்-ஸ்ரீநந்தகோபரது, மருமகளே-! கந்தம் கமழும் குழலீ- நறுமணம்வீசுகின்ற கூந்தலையுடையவளே! நப்பின்னாய் - நப்பின் னையே! கடை திறவாய்-கதவைத்திற: கோழி எங்கும் வந்து அழைத்தன காண்-கோழிகள் எப்புறத்திலும் வந்து கூவின; மாதவி பந்தல்மேல் - குருக்கத்திக்கொடியாலாகிய பந்தலின் மேலே, குயில் இனங்கள்-குயிற்கூட்டங்கள், பல் கால்-பலமுறை, கூவின காண்-: பந்து ஆர் விரலி-(கிருஷ்ணனேடு விளையாட உரிய) பந்து பொருந்திய கைவிரல்களையுடையவளே! உன் மைத் துனன் பேர்-உனது கணவன் புகழை, பாட-(உன்னுடன்) பாடும் படி, மகிழ்ந்துவந்து—, சீர் ஆர் வளை ஒலிப்ப-சிறப்புப்பொருந் திய வளைகுலுங்கிச் சத்திக்க, செந் தாமரை கையால்-செந்தா மரை மலர்போன்ற கைகளினல், திறவாய்—(கதவு) திறப்பாயாக.

வாயில்காப்பான் முதலியோரைப் புருஷகாரமாகக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை முன்பாசுரத்திலெழுப்பினவர்கள், 'பிராட்டியை முன்னிடாமல் பகவானைப்பற்றினல் இராவணனைப்போலத் தீமையடைவர்கள்' என்று நினைத்து, இப்பாசுரத்தால் இந்த க்ருஷ்ணவதாரத்திற்குச் சேர நப்பின்னைப்பிராட்டியை யெழுப்பு கிறார்கள். 'எதிர்க்கின்ற மதக்களிற்றை யுடையவன், நாட்டில் எவர்க்குமில்லாத தோள்வலியையுடையவன்' என்றும் முதலடிக்

குப் பொருள் கூறலாம். இடைச்சிறுமியர் 'ஸ்ரீகிருஷ்ணனுக்கு என்ன தீங்குவருகிறதோ?' என்று அதிசங்கைகொண்டு அப்பர மனது மங்களத்தையே எப்பொழுதும் நாடுபவர்களாதலால், கம்ஸனுடைய நகரத்துக்கு அருகிலுள்ள ஆய்ப்பாடியிலிருந்தும் அவனாற் கிட்டி யாதொரு தீங்குஞ் செய்யமுடியாதபடி காக்க வல்ல பெருவலிமைபடைத்துள்ளா னென்று நந்தகோபாலனு டைய வலிமையைப் பாராட்டி, 'உந்து மதகளிற்றனோடாத தோள்வலியன் நந்தகோபாலன்' என்கின்றனர். நப்பின்னை பிறந்தகத்திலிருப்பைக் காட்டிலும் புக்ககத்திலிருப்பதில் மிகு மகிழ்ச்சிகாட்டி வாழும் உத்தமீயாதலால், மாமனார் சம்பந்தத்தை யிட்டு 'நந்தகோபாலன் மருமகளே!' என்றது.[1] கோகுலத்துப் பெண்களெல்லாரும் ஒருபடி பார்த்தால், மருமகள்மார் ஆவார்க ளாதலால், வேறாகத் தெரிவிக்க, 'நப்பின்னாய்' என்று பேரைச் சொல்லியது. எம்பெருமானது பரிமளத்தோடு அவனுக்கும் மணத்தைத்தரவல்ல கூந்தல்மணமும் அடைபட்டுக்கிடவாதபடி செய் யென்பதற்காக 'கந்தம் கமழுங் குழலீ கடைதிற' என் றது.[2] மைத்துனன்-அத்தை மைந்தன்: மாமன்மகளை மணக்கு முறைமைபற்றி, நப்பின்னைக்கு ஸ்ரீகிருஷ்ணனை மைத்துனனென் றது.

§ கோழி 'கூப்பிட்டன' என்னாது 'வந்து அழைத்தன' என் றது-துடைதட்டி எழுப்புவாரைப்போலே எங்கும் வந்து கோழி கூவாநின்றன என்ற நயம்தோன்ற. கோழி - சாதியொருமை: ஒரு கோழியெங்குமொக்க ஏககாலத்தில் கூவயியலாமையால். 'மாதவிப்பந்தல்மேல் குயிலினங்கள்' என்றமையால், இவள் வளர்த்த குயில்கள் என்பது பெறப்படவே, அவை இவளைக் காணப்பெறுமையால், நாக்கு ஒட்டினமைதோற்றப் பலகாலும் கூவுகின்றன என்றபடி.

பகவானிடத்து அஞ்சும்போது 'நீங்கள் அஞ்சவேண்டா' என்று அபயமளிக்குங் கையாதலால், நப்பின்னையின் கையை 'செந்தாமரைக் கை' என்கின்றனர். "பந்தார்விரலி - நாங்கள் சைதந்யத்தைவிட்டு அசேதநமாகப் பெற்றிலோமே! அதென்? என்னில்,-உன்கைக்குள் அடங்கலாமே. இப்போது பந்தின் ப்ர ஸங்க மென்னென்றால், க்ருஷ்ணனோடு பந்தடித்து அவனைத் தோற்பித்து, அவனை யொருகையாலும் பந்தை யொருகையா லும் அணைத்துக்கொண்டு கிடக்கை. அவள் இவளுக்குப் போகோபகரணம், பந்து லீலோபகரணம். ஒரு கையில் நார மாய்த்து, ஒருகையிலே நாராயணனாய்த்து. ஒருகையிலே விபூதி யாய்த்து, ஒருகையிலே விபூதிமானாய்த்து." "உன் மைத்துனன்

---

1. "கொண்ட கொழுநன் குடிவறனுற்றெனக் கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்" என்றபடியன்றே புக்ககத்து வாழ்வைப் பெருக்க மதிப்பர் கற்புடைப் பெண்டிர்.

2. இண்ணகத்தை அணைசெய்தாற்போலே அடைத்துக் கொண்டு கிடவாதே வெட்டிவிடாய் என்றது வியாக்யாநம்.

பேர்பாட-நீயும் அவனும் மைத்துனமையாடி ஒருவர்க்கொருவர் ஒன்றுக்கு ஒன்பது சொல்லி இட்டடுகொள்ளும்போது உன்பக்ஷத்திலே நாங்கள் நின்று[1] அவன் தோல்விக்கு வசைபாட'' என்பன, வ்யாக்யாந வாக்கியங்கள்.

'கந்தம்கமழுங்குழலீ!' என்றதனால் மூக்கும், 'பேர்பாட' என்றதனால் நாவும், 'வளையொலிப்ப' என்றதனால் செவியும், 'வந்து திறவாய்' என்றதனால் கண்ணும், தமக்கு உரியபுலனை யநுபவிக்கச்செய் என்று பிரார்த்தித்தவாறும்: நான்கைக் கூறியது-மெய்க்கும் உபலக்ஷணம்.

எம்பெருமானர் மாதூகரத்துக்காக [பிக்ஷைக்காக]த் திருப்பாவை யநுஸந்தாநத்துடனே பெரியநம்பி திருமாளிகையை நோக்கி யெழுந்தருள, இவர் திருப்பாவை யநுஸந்திப்பதைக் கேட்டுப் பெரியநம்பி திருமகளாரான அத்துழாய் திருக்காப்பு நீக்கியவளவிலே இப்பாட்டு வர, அத்துழாயைப் பிராட்டியாகவே யநுஸந்தித்து ஈடுபட்டாரென்பர்; ஆகவே இப்பாசுரம்-எம்பெருமானருகந்ததாகும். (18)

19. குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டின்மேல் *
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி *
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்*
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய் *
மைத்தடங் கண்ணினாய்! நீயுன் மணாளனை *
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்*
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால் *
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) குத்துவிளக்கு - குத்துவிளக்கானது, எரிய-எரிந்து கொண்டிருக்க, கோடு கால் கட்டின்மேல் - யானைத்தந்தத்தாற் செய்த கால்களையுடைய கட்டிலில்,மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேல்-மெத்தென்றிருக்கிற பஞ்சினாலாகிய மெத்தையின்மேலே, ஏறி—, கொத்து அலர் பூ குழல்-கொத்தாகமலர்கிற புஷ்பங்களை முடித்த மயிர்முடியையுடைய, நப்பின்னை - நப்பின்னையினது, கொங்கைமேல்-ஸ்தநத்தில், வைத்து கிடந்த-வைத்துக்கொண்டு தூங்குகின்ற, மலர் மார்பா-பரந்த மார்பையுடையவனே! வாய் திறவாய்-வாய்திறந்து ஒருவார்த்தை சொல்வாய்; மை தடங் கண்ணினாய்-மைதீட்டிய பெரிய கண்களையுடையவளே! நீ—,உன் மணாளனை-உன் கணவனை, எத்தனை போதும்-எவ்வளவு நாழிகையானாலும்,துயில் எழ, தூக்கத்தினின்றும் உணர்ந்தெழுந்திருக்க, ஒட்டாய்காண்-சம்மதியாதிருக்கின்றாய்காண்;எத்தனை ஏலும்-ஒரு நிமிஷகால மென்றாலும, பிரிவு-(ஸ்ரீகிருஷ்ணனைப்)பிரிந்திருத்தலை, ஆற்றகில்லாய்-பொறுக்கும் வல்லமையற்றிருக்கிறாய்; (நீ இப்படியிருப்பது), தத்துவம்-உண்மையாக, தகவு அன்று-(உனக்குத் தகுதியன்று; (எ-று.)

---

1. பிரிந்தால், தாய்பக்ஷத்திலேயிறே ப்ரஜைகள் நிற்பது.

இதனால், சென்றவர்கள் கீழ் நப்பின்னையை யெழுப்பினதனால், நப்பின்னைப்பிராட்டியை முற்படவொட்டாமல் தகைந்த ஸ்ரீ கிருஷ்ணனை மீண்டும் எழுப்ப, நப்பின்னையின் விருப்பத்திற்கு இணங்கி ஸ்ரீகிருஷ்ணன் வாய்திறவாதே கிடக்க, மீண்டும் அவனை யெழுப்புமாறு நப்பின்னைப்பிராட்டியை யெழுப்புகிறார்கள். நீ எழுந்துவராவிட்டாலும் இருந்தபடியாகவே 'வருந்த வேண்டா, உமது காரியத்தை முடிப்போம்' என்ற வார்த்தையையாவது சொல்லலாமே; அதுவும் செய்யவில்லையே' என்ற கருத்து, 'வாய்திறவாய்' என்பதில் தோன்றும்.[1] இரப்பவர் வாசலிலே கிடக்க அநுபவிக்கின்ற அநுபவம் தகுதியன்று என்ற கருத்து, முதல்விளியில் தோன்றும். வீரபத்நியாகையாலே கோட்டுக்காலி லுறங்குகின்றன ளென்க. நப்பின்னை*** மார்பா-நப்பின்னை யானவள் தன் கொங்கையை மேலே வைத்திருக்கப் பள்ளிகொண்டு அதனால்மலர்ந்த மார்பா! என்றுமாம்.[2] 'எங்களைப்போல ஊராரிசைவதையும் எதிர்பார்க்க வேண்டாமல் "நள்ளிருட்கண் என்னை யுய்த்திடுமின்', என்றவாறு இருட்டைத் தேடவும் வேண்டாமல், பொழுது விடிகிற சமயத்திலும் பகலை இரவுபோல எண்ணி விளக்கை வைத்துக்கொண்டு கிருஷ்ணனோடு படுக்கையிலே கிடக்கும் இவளது பாக்யம் என்தான்!' என்ற கருத்து, முதல்நான்கடிகளில் தோன்றும். 'நப்பின்னாய்! ஸ்ரீக்ருஷ்ணன் உனக்கு மணவாளனானது பஞ்சலக்ஷங்குடியிலுள்ள பெண்களுக்கெல்லாம் அநுகூலமாயிருக்குமென்று நினைத்திருந்தோம்; பொதுவாக உண்ணவேண்டியதை நீ உனக்கே அடிமையாக்கி வைத்துக்கொண்டு அப்பாற் சிறிதும் நெகிழவொட்டாமற் செய்கின்றாயே!' என்ற இன்னாப்பு, 'உன் மணாளனைத் துயிலெழ வொட்டாய்...பிரிவாற்றகில்லாய்' என்ற இடத்தில் தோன்றும்.[3]

பஞ்ச - பஞ்சையுடைய; குறிப்புப் பெயரெச்சம்: இனி, பஞ்சசயனம் - அழகு வெண்மை மென்மை குளிர்த்தி நாற்றம் என்கிற ஐவகையான குணத்தையுடைய சயனமெனினுமாம்; இப்பொருளில், 'மெத்தென்ற' என்னும் அடைமொழி-இச்சயனத்தில் மென்மைக்குணம் விஞ்சியிருத்தலால் தனியே எடுத்துக்கூறிய

---

1. ஈண்டு, ஆறுயிரப்படியின்போக்கு சால வழகிது: "திறக்கிறவர்களையும் திறக்கவொட்டாதே நீயும் முலைக்கீழே அமுக்குண்டால் கிடந்தவிடத்தே கிடந்து 'மாசுச:' என்னவுமரிதோ"? என்பது.

2. "யசோதைப் பிராட்டி கட்டுக்கு அலருகிற மார்பு, இவளுடைய ஸ்தநபந்தநத்துக்கு அலரச்சொல்ல வேணுமோ" என்று ரஸமாகச் சொன்னது ஆறுயிரப்படி.

3. மற்றும், துயிலெழவொட்டாமைக்கும் பிரிவாற்றகில்லாமைக்கும் காரணம், 'தொட்ட கை விட்டவளவிலே நப்பின்னையின் உடம்புநிறம் மாறிப் பசப்பூர்ந்து வெளுத்துவிடுமாதலின்' என்பதும் பெறப்படுகின்றது.

தென்ன வேண்டும்; அன்றி, தளிர் மலர் பஞ்சு மெல்லியகம்பளம் பட்டு என்னும் இவ்வைந்து பொருள்களாலும் இயன்ற சயனம் எனினும் பொருந்தும். 'படுக்கையிலேறிப் பிராட்டியோடு நீ இருப்பது, எங்களையும் படுக்கையிலேறுமாறு இடங்கொடுத்தாலன்றோ பயன்பெறும்' என்ற கருத்து, 'சயனத்தின்மேலேறி' என்ற இடத்துத் தோன்றலாம். முக்தனாய்ப்போம்வன் ஆதிசேஷனாகிய பர்யங்கத்தை மிதித்துக்கொண்டு எம்பெருமானையநுபவிப்ப னென்று உபநிஷத்துக்கள் கூறுவது, இங்குக் கருதத்தக்கது. தத்துவம் அன்று - உன்ஸ்வரூபத்துக்கும் பொருந்தாது: தகவு அன்று-உன்குணத்துக்குஞ் சேராது என்று உரைத்து, புருஷகாரபூதையான உனது ஸ்வபாவத்துக்கும் ஸ்ரீக்ருஷ்ணனை எங்களுக்காக எழுப்பாமலிருக்கின்ற இது தகுதியன்று, உனது க்ருபாகுணத்துக்கும் தகுதியன்று என்று கூறினுமாம்.

இப்பாசுரத்தினால், "என்னடியாரது செய்யார்" என்று எம்பெருமான் பரிவன்; "நகஸ்சிந்நாபராத்யதி" என்று பிராட்டி பரிவள்; இவ்வாறு ஒருவரிலும் ஒருவர் முந்திப் பரிகின்ற இருவருடைய ஸ்வரூபம் ஒருவாறு நன்கு வெளியாகும். நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பன் - எம்பெருமான் பிராட்டியின் பக்திக்கு வசப்பட்டு அவள் சொல்லியபடி நடக்குமாறு பரதந்த்ரனாவ னென்க. பஞ்சசயனம்-அர்த்தபஞ்சகம்.[1] (19)

---

1. அர்த்தபஞ்சகம் என்பது - ஒவ்வொரு விஷ்ணுபக்தனும் அறிந்திடவேண்டிய முக்கியமான ஐந்து பொருளாகும். அவை யாவன:—

(i) பரமாத்ம ஸ்வரூபம் அல்லது ஈஸ்வர ஸ்வரூபம் என்ற 'மிக்க இறைநிலை'.

(ii) ஜீவாத்ம ஸ்வரூபம் என்ற 'உயிர்நிலை'.

(iii) முக்திகொடுக்கவல்ல உபாயங்களாம் 'தக்கநெறிகள்'.

(iv) பரமாத்மாவை அடையமுடியாமல் தடுக்கும் இடையூறுகளாம் ஊழ்வினைகள் என்ற ஜீவாத்ம விரோதிகள்.

(v) பரமாத்மாநுபவம்என்ற வாழ்வினை அல்லது முக்தி.

இந்த அர்த்தபஞ்சகத்தை—

"மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்"

என்று பட்டர் அருளிய தனியனாலும் உணர்க. ஆகவே அர்த்தபஞ்சகமாவது-(1) ஸ்வ ஸ்வரூப (2) பர ஸ்வரூப (3) புருஷார்த்த ஸ்வரூப (4) உபாய ஸ்வரூப (5) விரோதி ஸ்வரூபங்களை உள்ளபடியறிகை. இவைகளின் விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

20. முப்பத்து மூவ ரமரர்க்கு முன்சென்று *
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய் *
செப்ப முடையாய்! திறலுடையாய்! * செற்றார்க்கு
வெப்பங் கொடுக்கும் விமலா! துயிலெழாய் *
செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்*
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய் *
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை *
இப்போதே யெம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) முப்பத்துமூவர் அமரர்க்கு-முப்பத்துமூன்று பேரை பிரதானராகவுடைய (முப்பத்துமுக்கோடி) தேவர்கட்கு, முன்-(ஆபத்துநேர்வதற்கு) முன்னமே, சென்று-போய், கப்பம்-(அவர்கட்குவரக்கூடிய) நடுக்கத்தை, தவிர்க்கும்-(வரவொட்டாமற்) போக்குகின்ற, கலியே-மிடுக்கனே! துயில் எழாய்-நித்திரை நீங்கி யெழுந்திருப்பாய்; செப்பம் உடையாய்-(பக்தர்களைக் காக்க வல்ல) நேர்மையையுடையவனே! திறல் உடையாய்-(அநாஶ்ரிதரை யழிக்கும்) வல்லமையுடையவனே! செற்றார்க்கு-பகைத்தவர்க்கு, வெப்பம் கொடுக்கும்-துக்கத்தைத்தருகின்ற, விமலா-குற்றமற்றவனே! துயில்எழாய்—; செப்பு அன்ன மென் முலை-பொற்கலசங்களை யொத்த மென்மையான ஸ்தநங்களையும், செவ் வாய்-செந்நிறமான வாயையும், சிறு மருங்குல்-சிறிய [நுண்ணிய] இடையையுமுடைய, திருவே-லக்ஷ்மிபோன்றவளே! நப்பின்னை நங்காய்-நப்பின்னைப்பிராட்டியே! துயில் எழாய்-; (நோன்பிற்கு வேண்டிய), உக்கம்உம்-திருவாலவட்டத்தையும் [விசிறியையும்], தட்டொளிஉம்-கண்ணாடியையும், உன் மணாளனை-உன்னுடைய கணவனையும், தந்து-(எங்கட்குக்) கொடுத்து, இப்போதே—, எம்மை-எங்களை, நீராட்டு-நீராடச்செய்; (எ-று.)

ஆயர்மங்கையர் நப்பின்னைப்பிராட்டியைத் தமது வருத்தந் தோன்ற 'தத்துவமன்று தகவு' என்று கூறியதனால், அவள் பேசாதே கிடக்க, கிருஷ்ணனையே யெழுப்பிப் பார்ப்போமென்று அவனது புகழைப் பரக்கச் சொல்லித் துயிலெழுப்ப, அவனும் பேசாதே கிடந்ததனால், நப்பின்னையை வெறுத்துக் கூறவே இந்த க்ருஷ்ணன் ஒருகால் ரோஷங்கொண்டு வாளாவிருத்தல் கூடும்; ஆகவே, அப்பிராட்டியையே புகழ்ந்து கோபத்தைத் தணிவித்து அவள்மூலமாகவே நம்முடைய இஷ்டத்தைப் பெறுவோம்' என்று அப்பிராட்டியையே துயிலுணர்த்துகின்றனர், இந்தப்பாசுரத்தில்.

தேவர்கட்கு ஆபத்துநேர்வதற்கு முன்னமே அவ்வாபத்தைத் தவிர்ப்பவனே! அடியார்க்கு எளியனாய்நின்று பிறர்க்கு அரியனாயிருப்பவனே! பகைவர்களைத் துக்கமநுபவிக்கச்செய்பவனே! உன்னுடைய அம்புக்கு இலக்காகாமல் உனது திருவருள் நோக்கத்திற்கு இலக்கு ஆகும்படி விரும்புகிற எங்கட்காகத் துயிலுணரவேணுமென்று எழுப்பவும், அவன் எழுந்திராமையாலே, துயிலுணர்த்தச்சென்ற இவ்விடைச்சிறுமியர்

நப்பின்னையைப் பலவாறாகக் கொண்டாடித் துயிலுணர்த்தி, 'நாங்கள் மேற்கொண்டுள்ள நோன்பு ஒரு குறையுமில்லாமல் இனிதாக முடியுமாறு, நீ எங்கட்குவேண்டிய திருவாலவட்டத்தையும் கண்ணாடியையு முதவி, எங்கள் நோன்பிற்குத்தலைவனை உனது கணவனையும் எங்களுடனனுப்பி இப்போதே எங்களை நீராடச்செய்வாயாக' என்று பிரார்த்திக்கின்றனர். முதலிரண்டடிகளில்-வலிய ஆண்களாய்ச் சமயத்திற்கிட்டிக் காரியந் தீர்ந்த பின்பு கண்ணெடுத்துப் பாராதவரைவிட, அபலைகளாய் எப்போதும் உன்னையேநம்பிய எங்களைக் கைவிடலாகாது என்ற கருத்துத் தோன்றும். அமரர் முப்பத்துமூவராவார்-வஸுக்கள் எண்மரும், ருத்ரர் பதினொருவரும், ஆதித்யர் பன்னிருவரும், அசுவினீ தேவர் இருவரும். கப்பம்-கம்பம என்ற வடசொல்லின் விகாரம். செப்பம்-ரட்சையுமாம்.[1] வெப்பம்—பயமெனினுமாம்: பயஜ்வரமென்று வழங்குதலுங் காண்க. மணாளனை என்ற ஐகாரத்தை அசையாக்கி, உன்மணாளன் உக்கமும் தட்டொளியும் தந்து எம்மை நீராட்ட, நப்பின்னைநங்காய்! துயிலெழாய் என்று கூட்டியுரைத்தலு முண்டு; இப்பொருளில், 'நீராட்ட,' அகரம்-தொகுத்தல்.

§'எம்மை' என்று விரஹம்தின்ற உடம்பைக்காட்டுகிறார்கள்.

இப்பாசுரத்திற்கு உள்ளுறை-பிரிவில் ஆற்றமாட்டாத எங்களுக்கு அஹங்காரமமகாரநிவ்ருத்தியையும்ஸ்வரூபஜ்ஞாநத்தையுந் தந்து, உனக்கு அடங்கிய ஈசுவரனை எங்களோடு சேர்ப்பிக்க வேண்டுமென்பதாம். மிக்கபெருந்திரளான ஜ்ஞாநிகளுக்கு ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே அஜ்ஞாநமுண்டாவதற்கு முன்னமே அவர்கட்கு அஜ்ஞாநத்தை வரவொட்டாது தடுப்பவனே! என்பது, முதலிரண்டடியின் தேர்ந்தபொருள். (20)

21. ஏற்ற கலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப *
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய் *
ஊற்ற முடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய் *
மாற்றா ருனக்கு வலிதொலைந்துன் வாயிற்கண் *
ஆற்றாது வந்துன் னடிபணியு மாபோலே *
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) ஏற்ற-(பாலைக்கறக்குமாறு) கொண்ட, கலங்கள்-பாத்திரங்கள், மீது எதிர் பொங்கி-(நிறைந்து) மேலே எதிராகப் பொங்கி, அளிப்ப-வழியும்படியாக, மாற்றாதே-இடைவிடாமல்,

---

1 'செப்பம்' என்ற சொல்-திரிகரண நேர்மை என்ற பொருளது. அஃதாவது, திரிகரணங்களும் ஒற்றுமைப்பட்டிருத்தல். "இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச், செப்பமும் நாணு மொருங்கு" என்ற குறளினுரையிற் பரிமேலழகர், செப்பம்-செம்மை: கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறாகாமை எனக்கூறிய பொருணயம் உணரத்தக்கது.

பால் சொரியும்-பாலைச் சுரந்துதருகின்ற, வள்ளல்-உதார குணத்தையுடைய, பெரும் பசுக்கள்-பெரியபசுக்களை, ஆற்ற படைத்தான்-மிகுதியாகவுடைய நந்தகோபரது, மகனே - பிள்ளாய்! அறிவுறாய்-எழுந்திருப்பாய்; ஊற்றம் உடையாய்-(வேதங்களினாற்) பிரதிபாதிக்கப்படுகிறவனே! பெரியாய்-(அவ்வேதங்களினாலும் காணமுடியாதபடி) பெருமையுடையோனே! உலகினில் தோற்றம் ஆய் நின்ற - உலகத்திலே திருவவதரித்துநின்ற, சுடரே-ஒளிவடிவானவனே! துயில் எழாய்—; மாற்றார்-பகைவர்கள், உனக்கு-உன்னோடு எதிரிடுதற்கு, வலிதொலைந்து-வலிமையொழிந்து, ஆற்றாது-எதிர்த்துநிற்க முடியாமல், உன் வாயிற்கண் வந்து -உன்வாசலிலே வந்து, உன் அடி-உனது திருவடிகளை, பணியும் ஆ போலே-வணங்கும் விதம்போல, யாம்-நாங்களும், புகழ்ந்து-(உன்னைக்) கொண்டாடிக்கொண்டு, போற்றி-(உனக்குப்) பல்லாண்டுபாடி, வந்தோம்—; (எ-று.) 'வாசற்கண்' என்று ஓதுவர்.

துயிலுணர்த்தவந்தவர்களை நப்பின்னைப்பிராட்டியானவள், நோக்கி, 'நானும் உங்களிலேயொருத்தியன்றோ! ஆனபின்பு, எல்லாரும் கிருஷ்ணனை யெழுப்ப வாருங்கோள்' என்ன, அந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய குணங்களிலே தோற்ற இடைச்சிறுமியர் தாங்கள் தோற்றபடிசொல்லி யெழுப்புகிறார்கள். 'ஏற்றகலங்களெதிர்பொங்கிமீதளிப்ப மாற்றாதே பால்சொரியும்...பசுக்கள்' என்ற தொடரில், கலங்கொண்டுஏற்பார் குறையேயல்லது பாலுக்குக் குறையில்லை யென்பதும், ஒருகால் முலையைத் தொட்டுவிட்டதுவே வியாஜமாக ஓயாது பாலைப்பொழியுந் தன்மையன பசுக்களென்பதும் பெறப்படும்.[1] பசுக்கள் ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்-பரமபதத்தையும் பாற்கடலையும்விட்டு இங்குத் திருவாய்ப்பாடியில் நீ வந்தது செல்வச் செருக்குக்கொண்டு கிடந்து உறங்குவதற்கோ? உன்னையடைந்தார் குறையைத் தீர்ப்பதற்கு அன்றோ! ஆனபின்பு இங்ஙனே உறங்கலாமோ? என்பது குறிப்பு. உலகினில் தோற்றமாய்நின்ற சுடரே-காதினாற் கேட்டிருத்தலோடு நில்லாது பலபடியாகத் திருவவதரித்து அதனால் மிகுதியாக உலகத்தில் விளங்குகின்ற திருக்கல்யாணகுணங்களையுடையவனே! எம்பெருமானுடைய அவதாரங்கள் கருமத்தினாலல்லாமல் இச்சையினாலாவதால்[2] அவ்வெம்பெருமானுக்கு மேன்மையே யுண்டாகுமென்க; "நிலைவரம்பிலபல பிறப்பாய் ஒளிவருமுழுநலம்."

ஊற்றம்-வேதங்களிலூன்றியிருத்தல்; வேதங்களாற் பிரதிபாதிக்கப்படுதல்; இனி, ஆச்ரிதர்விஷயத்திற் கருத்துஊன்றி

---

1 'மாற்றாதே பால் சொரியும்' என்றதாலேயே வள்ளன்மை தோற்றியிருப்ப, மற்றும், 'வள்ளல்' என்றதற்குத் தாத்பர்யம்-க்ருஷ்ணனைப் போலே, பெண்ணுக்கும் பேதைக்கும் அணைக்கலாம்படி பவ்யமாயிருக்கை என்பது.

2 ஸம்ஸாரிகளைப் போலே பிறக்கப் பிறக்கக் கறையேறுகையன்றிக்கே சாணையிலிட்ட மாணிக்கம்போலே ஒளிவிடாநிற்கையினாலே எம்பெருமானுக்கு மேன்மையே யுண்டாகுமென்றபடி.

யிருத்தலுமாம். உன் பகைவர்கள் உன்வலிக்குத்தோற்று உன் காலில் வந்து விழுவதுபோல நசை உயிரை முடியவொட்டாமை யால் எங்கள் ஸ்வரூபத்தைப் பாராமல் உனது குணங்கட்குத் தோற்று, ஆற்றாமை இருந்தவிடத்தே இருக்கவொட்டாது எங்களைத்தள்ள உனக்கு மங்களாஸாஸநஞ்செய்பவர்களாய் வந்தோ மென்பதாம்.

உபதேசத்துக்குப் பாத்திரராகித் தமது உபதேசத்தாலே பரிபூர்ணஜ்ஞாநமுள்ளவர்களாய்த் தமக்கும் யுக்திகளைச்சொல்ல வல்லராம்படி ஜ்ஞாநத்தை யுபதேசித்துக்கொண்டு பகவத் குணநுபவத்தாலே பரிபுஷ்டரான ஸிஷ்யர்களை மிகுதியாகப் படைத்த ஆசார்யனுக்கு விதேயமானவனே! ஆஸ்ரிதபக்ஷபா தத்தை அவதாரத்தில் வெளியிடுபவனே! ஸத்ருக்கள் அம்புக் குத்தோற்றுக் காலில்வந்து விழுவதுபோல நாங்கள் உன்குணங் கட்குத் தோற்று அந்யஸேஷத்வமும் அஹங்காரமமகாரகார்ய மும் நீங்க, நீயேப்ராப்யமும் ப்ராபகமுமென்றும் பரகதஸ்வீகாரமே தக்கதென்றும் அறுதியிட்டு, ப்ராப்யத்வரையாலே உனது வாசலிலே மங்களாஸாஸநம் பண்ணிவந்து ஆச்ரயித்தோம்; ஆகையால், சிந்தையைவிட்டு ரக்ஷ்யவஸ்துவாகிய எங்களை ரக்ஷிப்பாயென்பது இதற்கு உள்ளுறையாகும். (21)

22\. அங்கண்மா ஞாலத் தரசர்* அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே*
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்*
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே*
செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ? *
திங்களு மாதித் தியனு மெழுந்தாற்போல் *
அங்க ணிரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்*
எங்கண்மேற் சாப மிழிந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) அம் கண்-அழகிய இடமுடையதாய், மா-விஸ்தார மான, ஞாலத்து-பூமியை யரசாட்சிசெய்த, அரசர்-ராஜாக்கள், அபிமானம் பங்கம் ஆய்-(இந்தப் பூமி நம்முடையது என்று கொண்டிருந்த) மமகாரம் நீங்குதலுண்டாகப்பெற்று, வந்து-, நின் பள்ளிக்கட்டில்கீழே-நீ பள்ளிகொண்டிருக்கின்ற கட்டிலினண்டை, சங்கம் - திரள் திரளாக, இருப்பார்போல்-(அந்தரங்கமாக) இருப்ப வர்போல,—(நாங்கள் உன் குணங்களில் ஈடுபட்டு ஸ்திரீத்வாபி மானம் ஒழிந்து), வந்து - (நீ உள்ள இடத்தைத் தேடி) வந்து, (எல்லாரையும் எழுப்பிய சிரமம் பயனடையும்படி), தலைப்பெய் தோம்-(உன்னைக்) கிட்டப் பெற்றோம்; கிங்கிணி வாய்ச்செய்த - சிறிதே மலர்ந்த, தாமரைப் பூப்போலே-, சிறுச் சிறிதே - சிறிது சிறிதாக, (வாத்ஸல்ய குணம் தோன்றும்படி), செம் கண் - சிவந் துள்ள (உன்) திருக்கண்கள், எம்மேல்-(ஆஸ்ரிதரான) எங்கள் மேலே, விழியாவோ-விழித்தலாகாதோ? திங்களும் ஆதித்தியனும் - சந்திரனும் சூரியனும், எழுந்தாற்போல் - (ஒருசேரத்) தோன்றி யதுபோல, (தண்ணளியையும் சீற்றத்தையும் ஒருங்கே கொண்ட), அம் கண் இரண்டும் கொண்டு-அழகிய கண்கள் இரண்டையுங்கொண்டு, எங்கள்மேல் சாபம் - எங்களிடத்துள்ள

பாவம் [பிரிவுத்துயரம்], இழிந்து - இழிந்துபோகும்படி, எங்கள் மேல்—, நோக்குதி-கடாட்சிப்பாயாக; (எ-று.)

ஒரு நாயகமாய் உலகமுழுவதையும் தம்மது என்று அபிமானித்து ஆண்ட அரசர்கள், எதிரிகளால் அடியுண்டு இராச்சியம் முழுவதையும் தோற்று மமகாரமெல்லாம் நீங்கித் தம்முடைய செல்வச்செருக்கு ஒழிந்ததனால் தத்துவஞானம் தலையெடுக்கப் பெற்று 'ஸ்ரீமந் நாராயணனே நமக்குப் புகல்' என்ற உறுதியான எண்ணத்தை யடைந்து, ஏகாந்தமாக நீ எழுந்தருளியிருக்கிற இடத்தில் வந்து கிடப்பர்: அதுபோல, நாங்கள் உனது குணங்கட்குத் தோற்று ஸ்த்ரீத்வாபிமானம் தொலைந்து நீ உள்ள இடத்திலே அந்தரங்கமாக வந்துவிட்டோம்; நீ எங்களுடைய விரகதாபமெல்லாம் தீரும்படி உனது திருக்கண்களால் மெல்லமெல்லக் கடாட்சிக்கவேணுமென்று, இதனால், ஸ்ரீக்ருஷ்ணனை முன்பு எழுப்பிய இடைச்சிறுமியர் வேண்டுகின்றனர். அரசர்கள் அபிமானம் ஒழிந்த பின்பு தாம் தாம்இருந்தவிடத்தே பகவானைத் தியானித்துக்கொண்டிராமல் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பள்ளிக்கட்டிற்கீழ் திரளாகக் கூடுவது - 'மீண்டும் யாரேனும் கிரீடத்தைச் சூட்டி இராச்சியத்தைப் பாதுகாப்பா யென்று நம்மை நிர்ப்பந்தித்தால் என் செய்வது ?' என்கிற [பழைய எளிவரவை நினைந்த] அச்சத்தினலாம். இனி, இங்குச் சொல்லப்படுகின்றவர்கள் - கண்ணபிரானோடு எதிர்த்துப் பொருது எதிரே நிற்கமாட்டாமற் சரணயாக அடைந்தவரெனினுமாம். சரத்துக்குத் தோற்ற அரசர்கள் வேறுபோக்கு இல்லாமையாற் புகுந்தார்கள்; ஆய்ச்சியரோ குணத்துக்குத் தோற்றுக் கைங்கர்யத்துக்காகப் புகுகின்ருர்கள் என்று உணர்க.

பள்ளிக்கட்டில்-தூங்குமஞ்சம்: சிங்காதன மென்பர், வ்யாக்யாதா. கிங்கிணிவாய்ச்செய்தல்-சிறிது அலர்தல்: இது இப் பொருளதாதலை, திருக்கோவையாரில் 'கிங்கிணிவாய்க் கொள்ளுங் கள்ளகத்த கழுநீர்மலரிவள்' என்ற இடத்துக்குப் பேராசிரியர் எழுதிய உரையாலுணர்க.[1] கிங்கிணி - வாய்ப்புறம் சிறிது திறந்த ஒருவகைச் சதங்கை: கிங்கிணிவாய்ச்செய்த எனவே, அதன் வாய்போற் சிறிது மலர்ந்த என்று பொருளாயிற்று. 'கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப் போலே செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ' என்ற தொடர்க்கு, முழுநோக்கமும் வேண்டுமென்பதில்லை யென்று கருத்து.[2] "சிற்றத்தோடருள் பெற்றவன்"

---

1. பேராசிரியர் உரை:—'சிறிதே மலரத்தொடங்கும் தேனையகத்துடைய கழுநீர்மலரிவள்' என்பது.

2. இங்கு 'சிறுச்சிறிதே' என்று சொல்லி வைத்து, மேல் 'அங்கண் இரண்டுங்கொண்டு' என்று சொல்லுதல் பொருந்துமோ என்னில்,-முழுநோக்குப்பொறுக்கும் அளவானவாறே 'இரண்டும்' என்று சொல்லுகிருர்கள் எனக்கொள்ள வேண்டுவது. 'விழியாவோ' என்ற சொற்கிடக்கையை நோக்கும்போது, கோடையோடின பயிரிலே ஒரு பாட்டம் என்னுமாபோலே, சாதகம் வர்ஷதாரையை ஆசைப்படுமாபோலே இவர்கள் மநோரதம் இருந்தபடியென்னே! என்ற வியப்போடு இரக்கமும் தோற்றுகிறது.

என்றபடி அடியவர் பக்கல் கருணையும் பகைவர்பக்கல் சீற்றமும் ஒருங்கே தோன்றுதலால், 'திங்களு மாதித்தியனு மெழுந்தாற் போல்' என்றார்; "கதிர்மதியம்போல் முகத்தான்" என்றாற் போல.

இத்தனை காலம் அநுபவித்தே தீரவேண்டியதாக நேர்ந்த தனால் பிரிவுத்துயரை 'சாபம்' என்றது. இனி,சாபம்போற் கொடுமையை விளைக்கின்ற இந்தஸம்ஸார மென்றுமாம். இழிந்து-இழிய: எச்சத்திரிபு. 'நோக்குதியால்' என்று பாடம் இருப்பின், நலம்: வியாக்கியானத்துக்கும் விரோதமில்லை. இனி, இழிந்து என்பதை இழிந்தது என்பதன் விகாரமாகக்கொண்டு உரைத்தலும் ஒன்று. வியாக்கியானத்தைக் காணுமிடத்து 'எங்கண் மேற்சாபமிழியுமேலோ ரெம்பாவாய்' என்று பாடம் இருக்குமோ என்ற எண்ணமும் உண்டாகிறது' 'எங்கண்மேற் சாபம்இழிந்து [நீங்கும்படி] அங்கண் இரண்டுங்கொண்டு நோக்குதியேல், (அதனைப் பெறும்பொருட்டு) அங்கண்மாஞாலத்தரசர்...போல் வந்து தலைப்பெய்தோம்; செங்கண் எம்மேல் விழியாவோ? [விழிக்கவேணுமென்றபடி]' என்பது, ஆறுயிரப்படி வ்யாக்யாதா காட்டும் அந்வயம். சாபமிழந்து என்றும் பாடமுண்டு.

அநந்யார்ஹஶேஷராகிக் கிட்டின எங்களுடைய தேஹாத்மாபிமானத்தைப் போக்கி, ஶேஷத்வத்தை யறிவித்து, அந்யஶேஷத்வத்தையும் 'அஹம் மே[எனக்கு நான் ஶேஷன]' என்கிற ஞானத்தையும், நம்மை நாம் காப்பாற்றிகொள்வோமென்கிற எண்ணத்தையும் போக்கி, உபாயாந்தரங்களைவிட்டு எம்பெருமானை நீயே உபாயமென்னும் ஜ்ஞாநத்தை உண்டாக்கி, பாரதந்த்ர்ய ஞானத்தைப் பிறப்பித்து, ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணனை உன்னை யநுபவிப்பித்து,அதனால் உன் முகோல்லாஸமான கைங்கர்யத்தையுமுண்டாக்கி, இப்படி உன்பரமக்ருபையாலே பரமபக்தியை க்ரமமாக உண்டாக்கினையானால், எங்களுடைய ஸாம்ஸாரிக துக்கங்களும் உன்னையிழந்திருந்த துயரமும் நீங்குமென்பது, உள்ளுறை. (22)

23 ‡‡மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் *
சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து *
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி *
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு *
போதருமா போலநீ பூவைப்பூ வண்ணா! * உன்
கோயினின்று இங்ஙனே போந்தருளி * கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து * யாம்வந்த
காரிய மாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) மாரி மலை முழைஞ்சில் - மழைக்காலத்திலே மலையினது குகையில், மன்னி-பொருந்தி, கிடந்து-படுத்து, உறங்கும் -

தூங்குகின்ற, சீரிய சிங்கம்-பெருமையுள்ள சிங்கம், அறிவுற்று - நித்திரைதெளிந்து, தீ விழித்து - நெருப்புப்பொறிபறக்க விழித்து, வேரி மயிர் பொங்க - (தனது) மணமுள்ள உளைமயிர்கள் நெறிக்க, எ பாடும் பேர்ந்து-நான்குபக்கமும் புடைபெயர்ந்து, உதறி - (உடம்பை) உதறி, மூரி நிமிர்ந்து-பெருமைதோன்ற (உடம்பு) நிமிர்ந்து, முழங்கி - கர்ஜ்ஜித்து, புறப்பட்டு - (குகையிலிருந்து) வெளிப்பட்டு, போதரும் ஆ போல - வெளிவருவது போல, பூவைப்பூ வண்ணா - காயாமலர்போன்ற நிறத்தவனே! நீ—, உன் கோயினின்று - உனது இருப்பிடத்திலிருந்து, இங்ஙனே போந்தருளி - (நாங்களிருக்கிற) இங்கே அருள் கொண்டுவந்து, கோப்புஉடைய சீரிய சிங்காசனத்து இருந்து - (பலவேலைப்பாடுகள்) பொருந்தியிருத்தலையுடைய சிறந்த சிங்காதனத்தில் வீற்றிருந்து, யாம் வந்த காரியம் - நாங்கள் வந்திருக்கிறகாரியத்தை, ஆராய்ந்தருள் - ஆலோசித்துக் கருணைசெய்வாயாக; (எ-று.)-'போலே நீ' என்றும் ஓதுவர்.

படுத்திருந்தபடியே ஸ்ரீகிருஷ்ணன் 'பெண்காள்! நீங்கள் இவ்வாறு துயிலுணர்த்தக் காரணம் என்?' என்ன, அவ்விடைப் பெண்கள் 'மழைக்காலத்திலே சிங்கம் குகையிலே உறங்கியிருந்து அது கழிந்ததும் நித்திரைதெளிந்து கண்ணைத் தீப்பொறி பறக்க விழித்து உளைமயிர்சிலிர்க்க நான்குபக்கமும் நடமாடிக் கர்ஜ்ஜித்துத் தலைநிமிர்ந்து புறப்பட்டுவருவதுபோல நீளாதுங்கஸ்தந கிரிதடியிற்கிடந்து உறங்குகிற யசோதையிளஞ்சிங்கமாகிய நீயும் உறங்குகின்ற இடத்தினின்றும் நாங்களுணர்த்துவதனால் துயிலுணர்ந்து, உறக்கந்தெளிந்து எதிரிகள் மண்ணுண்ணும்படி விழித்து நான்குபக்கமு மசைத்துச் சோம்பலைவிட்டு உடம்பை நிமிர்த்துக்கொண்டு, 'பெண்காள்! வந்தீர்களோ?' என்று எங்களை வினவிக்கொண்டே புறப்பட்டு வந்து சிங்காசனத்தில் வீற்றிருந்து, நாங்கள் வந்த காரியத்தைப் பேரோலக்கமாக இருந்து சொல்ல, ஆராயவேண்டும்' என்கிறார்கள்.[1] இங்ஙனேபோந்து-மண்டபத்திலே வந்து என்க. கோப்புடைய சீரியசிங்காதனம் என்பதற்கு - ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்தபோது அந்தப் பரமபதத்தில் அப்பரமனுக்கு உரியனவும் பணிசெய்யும்படி இங்குத் தோன்றுமென்ப:—அதற்கு ஏற்ப, தர்மம்அதர்மம் ஜ்ஞாநம்அஜ்ஞாநம் வைராக்கியம்அவைராக்கியம் ஐசுவர்யம்அநைசுவர்யம் என்கிற எட்டுக் கால்களை யுடையதாய்த் திருமாமணிமண்டபத்திலே ஆதிசேஷன்மீதிருக்கிற தர்மாபீட மென்பதுவே இங்கு ஸ்ரீக்ருஷ்ணனுக்குச் சிங்காதனமாக அமைந்துள்ளதென்றபொருள்தோன்றக் கூறுவர் வ்யாக்யாதா.[2]

---

1. முதலைந்தடிகளில் கூறியுள்ள உவமை பெரிதும் பாராட்டத்தக்கது.

2 'சிங்காசனத்து இருந்து' என்றது—இந்த சிம்மாசனத்[illegible]ந்து நினைப்பிட்டது என்றால் அறுநியாயிருக்கைக்காக.

'போதருமாபோல' என்றபாடம் எதுகைத்தொடைக்கு ஒவ்வாமலிருத்தலால், 'போருமாபோல' என்றுபாடங்கொள்ளுவர் சிலர்.

§ பூவைப்பூவை விதந்தோதியது, கறவை காவலன் நிறனொடு பொருவும் பூவாதலின்.

ஈசுவரனே உபாயம் என்கிற ஸித்தோபாயநிஷ்டர்க்கு ப்ராப்யத்வரை விஞ்சியகாலத்தில் விருப்பத்தைத் தலைக்கட்ட ஈசுவரன் தானே முந்திவருவா னென்றபொருள், இதில் தோன்றும். (23)

24. ‡‡அன்றிவ் வுலக மளந்தாய்! அடிபோற்றி *
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி*
பொன்றச் சகட முதைத்தாய்! புகழ்போற்றி *
கன்று குணிலா வெறிந்தாய்! கழல்போற்றி *
குன்று குடையா வெடுத்தாய்! குணம்போற்றி*
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி*
என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான்*
இன்றியாம் வந்தோ மிரங்கேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) அன்று - (மஹாபலி உலகங்களையெல்லாம் கவர்ந்துகொண்ட) அக்காலத்தில், இ உலகம் அளந்தாய் - இந்த உலகங்களையெல்லாமளந்தவனே! அடி-(உனது) திருவடிகள், போற்றி-வாழ்க; அங்கு - (ராவணனுள்ள) அந்த இடத்திலே, சென்று - நடந்துபோய், தென் இலங்கை - தென்திசையிலிருக்கும் இலங்கையிலுள்ளாரை, செற்றாய் - அழித்தவனே! திறல்-(உனது) ஸாமர்த்தியம், போற்றி—; சகடம்- சகடாசுரனை, பொன்ற - அழியும்படி, உதைத்தாய் - காலாலுதைத்தவனே! புகழ்-(உனது) கீர்த்தி, போற்றி—; கன்று - கன்றின்வடிவாய் வந்தவத்ஸாஸுரனை, குணில்ஆ-எறிதடியாக்கொண்டு,எறிந்தாய்-(விளங்கனி வடிவாய்வந்த கபித்தாசுரன்மேல்) வீசியவனே! கழல்-(உனது) திருவடிகள், போற்றி—; குன்று - கோவர்த்தனமலையை, குடை ஆ எடுத்தாய் - குடையாக எடுத்துப் பிடித்தவனே! குணம் - (உனது) குணம், போற்றி—; பகை - விரோதிகளை, வென்று கெடுக்கும் - ஜயித்து அழிக்கின்ற, நின்கையில் - உன்கையிலுள்ள வேல்-வேலென்னுமாயுதம், போற்றி—; என்று என்று - என்று பலவற்றையுஞ் சொல்லி, உன் சேவகமே ஏத்தி-உனது வீரச்செயலையே துதித்து, பறைகொள்வான் - (நோன்புக்கு வேண்டிய) பறையைப் பெற்றுக்கொள்ள, இன்று-இப்போது, யாம்-நாங்கள், வந்தோம்—; இரங்கு - (எம்விஷயத்தில்) நீ மனமிரங்குவாய்; (எ-று.)

கோபகன்னிகைகளது வேண்டுகோளின்படியே ஸ்ரீ கிருஷ்ணன் தான் படுத்திருந்த இடத்தைவிட்டு வெளிமண்டபத்திலே வந்தனனாக, அவர்களும் தமது காரியத்தை மறந்து அவனிடத்தில் பரிவுகொண்டு மங்களாசாசநஞ் செய்து பிறகு தமது வேண்டுகோளைத் தெரிவிக்கிறார்கள், இப்பாசுரத்தில்; வடிவழகு இவ்

வாறு இவர்களைச் செய்விக்கின்றதென்க. ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரிந்து வருந்திப் பெண்மையையும் இழந்து அவனுள்ள இடந் தேடிவந்த தங்கட்காக அவன் தன் சீலகுணமும் வடிவழகும் விளங்கப் பத்தெட்டடி நடந்துவந்தபோது, மஹாபலியினிடத்தி லகப்பட்டு அவனது அபிமானத்திற்கு இலக்கு ஆன பூமியை அவனிடத்தினின்றும்மீட்குமாறு மெல்லியதனது திருவடிகளைக் கொண்டு காடும் ஓடையும் அளந்த செயல் நினைவிற்கு வருத லால், அக்காலத்தில் எவரும் மங்களாசாசனஞ் செய்யாத குறை தீர இப்போது மங்களாசாசனஞ் செய்கின்றார்கள். அழகுக்கு இலக்கு ஆகாதாரை அம்புக்கு இலக்கு ஆக்கினமையிலீடுபட்டு 'தென்னிலங்கை செற்றாய் போற்றி' என்றும், இராவணனைப் போலன்றித் தான் சத்துருவென்பதே தெரியாதபடி வந்தவனாதலால் அதன் பிறகு 'பொன்றச் சகடமுதைத்தாய் போற்றி' என்றும், அவ்வாறே இருவர் ஒருசேர வந்ததனால் அதனையடுத்து 'கன்று குணிலாவெறிந்தாய் போற்றி' என்றும், அநுகூலனான இந்திரன் பிரதிகூலனாக வந்ததனால் அதனையடுத்து 'குன்று குடையாவெடுத்தாய் போற்றி' என்றும், இவ்வாறு வீரசரிதத்தைச் சொல்லும்போது 'அவ்வெம்பெருமானது திருமேனிக்குக் கண்ணெச்சிறப்படப் போகிறதே' என்று அஞ்சி ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் நிகழ்ந்த செயல்களெல்லாம் அப்பிரான் கொண்டுள்ள வேலென்னும் ஆயுதமே செய்ததென்பார் 'கையில் வேல் போற்றி' என்றும் கூறினார்கள். சிறுகுழந்தைப் பருவத்தில் ஒருவரும் உதவுபவர் அருகேயிராத சமயத்தில் சகடாசுரனைத் தனக்குச் சிறிதும் வருத்தமின்றி நிரஸித்தமையை நினைந்து 'புகழ் போற்றி' என்றும், விளாமரத்தின்மேற் கன்றை விசிறியெறிந்த போது சிறிது தூக்கி முடக்கினபடி வைத்துள்ள திருவடியினழகி லீடுபட்டு 'கழல் போற்றி' என்றும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையை மறந்து புத்தியீனனாய் இந்திரன் கல்மழையைப் பொழிவித்தபோது 'அநுகூலனுக்குவந்த கலக்கமாகையால் தானே தெளிகிறான்; இவனுக்குத் தீங்கு ஒன்றும் நாம் செய்யக்கூடாது' என்று எம்பெருமான் திருவுள்ளத்திற் கொண்ட பெரும்பொறுமையிலீடுபட்டு 'குணம்போற்றி' என்றும் அருளிச்செய்தனர்.[1] "எவ்வாறு நடந்தனை" என்றபடி பரியுந்தன்மை யுள்ளவராதலால், திருவுள்ளம் புண்பட்டு 'அங்குச் சென்று' என்று கூறு கின்றாரென்னலாம்:[2] அங்கு-இராமாவதாரத்திலெனினுமாம்.

---

1. குளவிக்கூடு கொண்டாற்போலே ஹிம்ஸகர் சேர்ந்த தேசத்தைச் செற்ற மிடுக்கை நினைந்து 'திறல்போற்றி' என்றும், வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டியிருக்க, அதுக்கு மேலே வேலைப்பிடிப்பதே! என்று வேல்பிடித்த கைக்குத் திருப் பல்லாண்டு பாடுகிறார்கள்' என்றும் அருளிச் செய்தனர் என்னவுமாம.

2. இனி, 'தென்னிலங்கை செற்றாய்' என்றபோதே அங்குச் செல்லுகை தெறியிருப்ப,'அங்குச் சென்று' என்றது-புலிகிடந்த தூற்றிலே செல்லுமாபோலே பிராட்டியைப் பிரித்த பையலிருந்த விடத்தே செல்லுவதே! என்ற பாவந் தோற்றவென்க.

கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன் மகனாகையால், இவனுக்கும் வேல் உளதாயிற்று.

§ நாவினுக்கிடும் அறுசுவைபோலே இவர்கள் நாவினுக்கு 'அடிபோற்றி, திறல்போற்றி, புகழ்போற்றி, கழல்போற்றி, குணம் போற்றி, வேல்போற்றி!' என்பன அறுசுவையாயிருந்தபடியைச் சொல்லுகிறது என்ற பொருள் படும்படி உரையருளுவது ஆறுயிரப்படி. இவ்வுரைநயம் சுவைக்கற்பாலதே.

ஒரு குறையுமின்றி அவாப்தஸமஸ்தகாமனும் [விரும்புவதை யெல்லாம் பெற்றிருப்பவனும்] எல்லாரையும் பாதுகாப்பவனுமான எம்பெருமானைக் கண்டால் தமக்கு நன்மைகளை அவனிடத்திற பிரார்த்திக்க வேண்டியதாயிருக்க, தாம் அவனுடைய மங்களத்தைப் பிரார்த்திப்பது பொருந்துமோவெனில்?—எம்பெருமானுடைய திருவருளாற் கிடைத்த பக்தியினாற் பரவசப்பட்டு அவ்வெம்பெருமானுடைய ஸர்வஶக்தித்வம் [எல்லா வல்லமையுமுடைமை] முதலிய குணங்களையும் மறந்து, 'பகவானுக்குக் குறையொன்றுமில்லாமலிருப்பதே தமக்குக் குறையொன்றுமில்லாமை' என்று நினைத்துச் செய்வதனாற் பொருந்தும். இவர்கள் தம்முடைய நன்மையை மறந்து எம்பெருமானுடைய நன்மையைப் பிரார்த்திக்கின்ற இது - அயோத்தியிலுள்ளார் தேவதைகளையுமுட்பட இரட்சித்துப் புகழ்பெற்ற ஸ்ரீராமபிரானது சௌந்தர்யம் முதலிய குணங்களுக்கு ரக்ஷையைத் தேவதைகளிடம் பிரார்த்தித்ததையும், சீதாகலியாணமானபின்பு அயோத்திக்கு மீண்டு வரும்போது பரசுராமன் எதிர்ப்படக்கண்ட தசரதசக்கரவர்த்தி ஸ்ரீராமனுடைய பல பராக்கிரமங்களைக் கேட்டிருந்தும் பயப்பட்டு அப்பரசுராமனிடத்தில் அபயங்கொடுக்கவேணுமென்று பிரார்த்தித்ததையும், விசுவாமித்திரரின் யாகத்தைக் காத்தது முதலிய பெருமாளுடைய பராக்கிரமத்தை யறிந்திருந்தும் இராமபிரான் காட்டுக்கு எழுந்தருளியபோது கௌசலை அப்பிரானுக்கு மங்களத்தைப் பிரார்த்தித்ததையும், தத்துவதரிசிகளான ருஷிகள் ஸ்ரீராமன் தண்டகாரணியத்துக்கு எழுந்தருளியபோது பெருமாளுடைய வடிவழகிலே ஈடுபட்டு மங்களாசாஸனஞ் செய்ததையும், ஈசுவரனே தனக்குப் புத்திரனாகப் பிறந்திருக்கின்றானென்று அறிந்திருந்தும் ஸ்ரீவசுதேவரும் தேவகியும் கம்சனிடத்தில் அச்சத்தாலே 'சங்கசக்கரதாரியாயிருக்கிற இந்த வடிவத்தை மறைக்கவேணும்' என்று வேண்டியதையும் போல்வதனாற்பொருந்தும். ஈசுவரன் ரக்ஷகனும் தாம் ரக்ஷிக்கப்படும் பொருளுமாயிருக்க அதற்கு மாறாக மங்களாசாஸனஞ் செய்வது விபரீதஞானமன்றோ வென்னில்?—கருமசம்பந்தத்தினால் வரும் விபரீதஞானம் விடத்தக்கதேயன்றி எம்பெருமானுடைய விலக்ஷணமான தன்மையைக் கண்டு வரும் இது ஸ்வரூபத்துக்கு ஒத்ததே; மேலும், தலைவனுக்கு மேன்மையுண்டாக வேணுமென்று நினைத்தல் அடியவனுக்குக் கடமையாதலால், தம்முடையநன்மையை நாடாமல் மங்களாசாஸனஞ் செய்தல்முறையேயாம். மற்றுள்ள ஆழ்வார்களைக் காட்டிலும் பகவானிடத்துப் பொங்கும் பரிவுகொண்டு மங்களாசாஸனஞ் செய்ததனாலேயே

பெரியாழ்வாரென்று பேர்பெற்றவிஷ்ணுசித்தர துதிருமகளாராத லால், இவட்கும் அவ்வாறான தன்மை உண்டாயிற்று.

'வந்தோம்' என்பதனால் - பேற்றிலுள்ள ருசியின் கார்யத்தையும், 'இரங்கு' என்பதனால்-பேற்றுக்குச் சாதனமான பகவானது கருணையையும், 'ஏத்திப் பறைகொள்வான்' என்பதனால் - புருஷார்த்தமாகிய கைங்கர்யத்தையுங் கூறியவாறாயிற்று. ப்ராப்யத்வரையால் தாங்களே வந்த குற்றத்தைப் பொறுக்கவேணுமென்ற கருத்தும் 'இன்றியாம் வந்தோம் இரங்கு' என்றவிடத்துத் தொனிக்கும். போற்றி=போற்றிய: வியங்கோள். (24)

25. ஒருத்தி மகனாய்ப் பிறந்து*ஓ ரிரவில்[1]
ஒருத்தி மகனா யொளித்து வளர *
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த *
கருத்தைப் பிழைப்பித்துக்* கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே!* உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில் *
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி*
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) ஓர் இரவில் - ஓரிராத்திரியில்தானே, ஒருத்தி மகன் ஆய் பிறந்து - (தேவகியென்ற) ஒருத்திக்குப் புத்திரனாகத் தோன்றி, ஒருத்தி மகன் ஆய் - வேறொருத்தியாகிய யசோதைக்குப் புத்திரனாய், ஒளித்து வளர - மறைந்து வளர, தரிக்கிலான் ஆகி - (அவ்வாறு வளர்வதைக் கேட்டுப்) பொறுதவனாய், தான்- (உன்னாலே நாசமடையப்போகின்ற) தானே, தீங்கு நினைந்த - (எப்படியாவது உன்னைக் கொல்லவேணுமென்று) தீமையையெண்ணின, கஞ்சன் - கம்ஸனது, கருத்தை - எண்ணத்தை, பிழைப்பித்து - தவறச்செய்து, வயிற்றில் - (அவன்) வயிற்றிலே, நெருப்பு என்ன - நெருப்புக்குச் சமானமாக, நின்ற-(அச்சத்தையுண்டாக்கிக்கொண்டு) இருந்த, நெடு மாலே-(அடியவரிடத்துப்) பெருங்கருணையுள்ளவனே! உன்னை அருத்தித்து வந்தோம்-உன்னை யிரந்துகொண்டு வந்தோம்; பறை தருதிஆகில் - (எமது) வேண்டுகோளைத் தருவாயானால், (அதனைப் பெற்று), திரு தக்க செல்வம்உம் - ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்குத்தக்க உனது ஐசுவரியத்தையும், சேவகம்உம் - (உனது) பராக்கிரமத்தையும், யாம் - நாங்கள், பாடி - சொல்லிப்பாடி, வருத்தமும் தீர்ந்து-வந்த சிரமமும்நீங்கி, மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, (இருப்போம்):

ஸ்ரீகிருஷ்ணன் இவர்களைப் பார்த்து 'நீங்கள் வேண்டுவது என்?' என்று வினவ, எங்களுக்கு உன்னையடைவதிலே தடையாயிருப்பது ஏதேனுமிருப்பினும் அவையெல்லாம் போக்கி, எங்களுடைய துயரமெல்லாம் நீங்கி நாங்கள் மகிழுமாறு எங்களை அங்கீகரிக்கவேணுமென்று பிரார்த்திக்கின்றார்கள் இப்பாசு

---

1. முதலடியில் 'பிறந்தோ ரிரவில்' என்பது தெளிவுநோக்கி இங்ஙன் பிரிக்கப்பட்டதாகலின், தளை தட்டாமை யுணர்க.

ரத்தில். ஒருத்தி ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் புதல்வனாகப் பெற வேணுமென்று நோற்க, மற்றொருத்தி பிறந்தபொழுது தொடங்கி உளவாகும் குழந்தைப்பருவத்துத் திருவிளையாடல்களையெல்லாம் அநுபவிக்கவேணுமென்று விரும்ப, திருமாலும் அவ்விருவரின் கருத்தையும் ஒருங்கே நிறைவேற்றும்படி ஸ்ரீ கிருஷ்ணனாய்த் தேவகிக்குப் புதல்வனாகத் தோன்றி, குழந்தைப் பருவத்து விளையாடல்களினினிமையெல்லாங்கண்டு அநுபவிக்கும்படி யசோதையினிடத்து ஏழுபிராயம்வரையிலும் வளர்ந்தனனென அறிக. ஸ்ரீ கிருஷ்ணனையே மகனாகப் பெறும் பாக்கியமுள்ளவளாதலால் 'ஒருத்தி' என்றும், அப்பிரான் அவதரித்தற்கு உரிய காலமாயிருந்ததனால் 'ஓரிரவு' என்றும் கூறுகின்றார்கள். இனி, 'இன்னாளென்று பெயர் சொல்லினால் யாரேனும் எதிரிகள் அபிசாரஞ் செய்வார்களோ!' என்ற அச்சத்தினால் பெயர்சொல்லாது 'ஒருத்தி' என்றும், ஸ்ரீக்ருஷ்ணனை ஓரிடத்திலிருக்கவொட்டாது அலைத்த இரவு ஆதலால், வெறுப்பினால் 'ஓரிரவு' என்றுங் கூறியதெனினுமாம்.[1] 'கொல்ல நினைந்த' என்னுது 'தீங்கு நினைந்த' என்றது - கொடுஞ் சொல்லைச் சொல்லவாய் கூசியதனாலாகும்: இங்கே, 'கெடுவான் கேடுநினைப்பான்' என்ற பழமொழி கருதத்தக்கது. ஒளித்து வளர ='இவன் ஸர்வேஶ்வரனே' என்று எல்லோரும் நன்றாக உணராதவாறு வளர.[2] ஆஶ்ரிதர் வயிற்றிலிருந்த நெருப்பைக் கம்ஸன் வயிற்றிற்கொளுத்தினை தூ ஆஶ்ரிதரிடத்திலுள்ள மிக்கமோஹத்தினாலென்பது, 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே' என்ற இடத்துத் தோன்றும்: ஆஶ்ரிதர் வயிற்றில் நெருப்பு - கொடிய அசுரர்களால் நேரும் உபத்திரவத்தினாலாகியது. இப்படி அடியாரிடத்துப் பிச்சேறின உன்னைப் பின்னும் பிச்சுக்கொள்ளுமாறு செய்தோமென்பார் 'நெடுமாலே அருத்தித்து வந்தோம்' என்கின்றனர்.

'பறைதருதியாகில்' என்ற இடத்தில் - நாம் எம்பெருமானை வேண்டிக்கொள்ளுதலே பயனைத் தருமென்பது இல்லை; எம்பெருமானுடைய நினைவே பயனை விளைப்பது என்ற சாஸ்திரதாத்பர்யம் வெளியாம். யாம்பாடி - க்ருஷ்ணனென்ற பேரையும் வாயினால் சொல்லக்கூடாதென்று முதியவரான இடையர்களின் நிர்ப்பந்தத்திலிருந்த நாங்கள் அவர்களே அநுமதி

---

1. மற்றும் ஸர்வலோகங்களுக்கும் பிதாவானவன் ஒருத்தி மகனாகப் பிறப்பதே! என்ற ஈடுபாடு 'மகனாய்' என்பதில் தோன்றும். இனி, மகனாய் - பிறந்தபோதே மகன் செய்யவேண்டிய காரியத்தைச் செய்துகொண்டே பிறந்த எனினுமாம்: பிறந்தபோதே பித்ருவசநபரிபாலநம் பண்ணினவனன்றோ! 'ஆழ்வார்களையும் தோள்களையும் மறைத்தாணிறே! [ஆழ்வார்கள்-சுதரிசன பாஞ்சசன்னியங்கள்]. பிறந்து - கர்மவஶ்யர் படுவதெல்லாம் க்ருபாவஶ்யனாய்க்கொண்டு பட்டபடி என்றனர் வியாக்யாதா. 'அவன் நமக்காகப் பிறந்தானென்று அறிய நம் பிறவி அவன் மாதாபிதாக்கள் காலில் விலங்குபட்டது படும்.'

2. 'திருவவதரிக்கச்செய்தே அந்தர்யாமி பட்டதுபடுவதே.'

கொடுக்க உவப்போடு பாடும் பாக்கியத்தை யடைந்து. திருத்தக்க செல்வம் என்பது - திருவையுடைமையால் [லக்ஷ்மீ பதியாயிருத்தலினால்] வந்த ஐசுவரியமென்றும், திருவும் விரும்பத்தக்க ஐசுவரியமென்றும் பொருள்படும்.

"இருத்தல் என்ற பொருளையுடைய வினைகள் ப்ரயோகிக்கப் படாமலிருப்பினும் உள்ளனபோலவேயாம்" என்ற நியாயம் பற்றி, 'இருப்போம்' என்ற சொல் இறுதியிற் கூட்டிக்கொள்ளப்பட்டது; இனி, 'ஒருத்தி மகனாய்ப் பிறந்து...நின்ற மாலே! திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து [மகிழுமாறு] பறை தருதியாகில், (அதனைப் பெற்றுக்கொள்ளுமாறு) உன்னையருத்தித்து வந்தோம்' என்று அந்வயமாகவுமாம்: இது, ஆறாயிரப்படி வ்யாக்யாதாவால் காட்டப்பட்டுள்ளது: இப்பொருளில், மகிழ்ந்து - எச்சத்திரிபு: ஆகில் என்ற வினையெச்சத்துக்கு 'பெற' என்று ஒரு முடிக்குஞ்சொல் வருவிக்க. (25)

26. மாலே! மணிவண்ணா! மார்கழிநீ ராடுவான் *
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்*
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன *
பாலன்ன வண்ணத்து * உன்பாஞ்ச சனியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே *
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே*
கோல விளக்கே கொடியே விதானமே *
ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) மாலே - (ஆச்ரிதரிடத்தில்) ஆசைப்பெருக்கை யுடையவனே! மணிவண்ணா - நீலமணிபோன்ற நிறத்தையுடையவனே! ஆலின் இலையாய-பிரளயகாலத்தில் ஆலிலையிற் கண்வளர்பவனே! மேலையார் செய்வனகள்-பெரியோர்கள் செய்வனவற்றிற்சேர்ந்த, மார்கழி நீர் ஆடுவான்-மார்கழியில் நீராடுவதற்கு, வேண்டுவன-வேண்டியவற்றை, கேட்டி ஏல்-கேட்பாயானால், (சொல்லுகின்றோம்); ஞாலத்தை எல்லாம் - (சத்துருக்களாயுள்ள) ஜனங்களெல்லாம், நடுங்க-நடுங்கும்படி, முரல்வன-சத்திக்கின்றனவும், போய்ப்பாடு உடையன - பேரோசை யுடையனவும், பால் அன்ன வண்ணத்து-பால்போன்ற நிறத்தையுடையனவும், உன் பாஞ்சசனியமே போல்வன-உனது பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கத்தை யொத்தனவுமான, சங்கங்கள்ஏ-சங்கங்களும், சால பெரும் பறைஏ-மிகவும் பெரிய பறைகளும், பல்லாண்டு இசைப்பார்ஏ-பல்லாண்டு பாடுபவர்களும், கோலம் விளக்குஏ - அழகிய தீபங்களும், கொடிஏ-கொடிகளும், விதானம்ஏ - மேற்கட்டியும், (ஆகிய இவற்றை), அருள்-கருணை செய்வாய்; (எ-று)

"நாராயணன்" என்றும், "பையத்துயின்றபரமன்" என்றும் முன்பு சொல்லிப்போந்த இந்த இடைச்சிறுமியர், 'உன்கோயிலினின்று இங்ஙனே போந்தருளி யாம்வந்த காரியம் ஆராய்ந்தருள்' என்றுசொன்னதும், ஸ்ரீக்ருஷ்ணன் அடியார்களிடத்துள்ளபேரன்

பினாலே துயிலுணர்ந்து நடந்து வந்து சிங்காசனத்தில் வீற்றிருந்து, 'பெண்காள்! நீங்கள் நம்மை வேண்டாது பறைதருதியாகிலென்று வேறொன்றை வேண்டவே, உமது பேச்சிற் சந்தேகமுண்டாகின்றது; நீங்கள் சொல்வது என்? அதற்கு மூலம் என்ன? அதை அநுஷ்டிப்பதற்கு வேண்டுமவை எவை? அவற்றைச் சொல்லுங்கோள்' என்ன, இப்பாசுரத்தால் அவற்றை விவரித்துச் சொல்லுகிறார்கள். ஸ்ரீகிருஷ்ணன் வினவியது அவனுடைய ஆஸ்ரிதவ்யாமோஹ குணத்தாலாதலால் அதனை நினைந்து ஈடுபட்டு, பிராட்டி சக்கரவர்த்தித் திருமகனை 'ஶரணாகதவத்ஸலன்' என்றாற்போல, 'மாலே' என்று விளிக்கின்றனர்.[1]

சுருதிஸ்மிருதிகளிலில்லையேயாகிலும் *ஹோலோத்ஸவாதிகளைப்போல ஒரு பயனைக் கருதி முன்னோர்கள் அநுஷ்டித்ததாதலால், ஹோளாதிகரண நியாயத்தாலே நாங்கள் அநுஷ்டிக்கிற மார்கழி நீராட்டமென்பது - சிஷ்டாசாரங்களிற் சேர்ந்ததாகும்; இதற்கு வேண்டுமவை - மார்கழி நீராட்டத்திற்கு விரோதிகளாயிருப்பார் நடுங்கும்படி முழங்கவல்ல சங்கமும், புறப்பாடுகொட்டப் பெரும்பறையும், புறப்படும்போது எதிரே நின்று காப்பிடுதற்காகப் பல்லாண்டுபாடுபவர்களும், ஒருவர்க்கொருவர் முகந்தெரியும்படிக்கு ஆன மங்களதீபங்களும், தூரத்திலேயிருப்பார்க்குத்தெரியும்படி பிடிக்கும் கொடியும்,நீராடப்போம்போது தலையிற் பனிவிழாமல் தடுக்கும்படி மேற்கட்டியும் ஆகிய இவைகளே: இவற்றைத் தருமாறு கருணைசெய்வாயென்று பிரார்த்திக்கிறார்கள். வெளிப்படைப் பொருளில், காத்யாயனியின் பூஜைக்கு இவை வேண்டுமென்க. தங்கட்குப் பரமோத்தேசியமான ஸ்ரீகிருஷ்ணனைக் கிட்டின பின்பும் இவர்கள் நோன்பு நோற்பதனால், ப்ரபந்நனாலும் லோகஸங்க்ரஹார்த்தமாகப் பகவத்கைங்கர்யரூபமான கர்மங்களை யநுஷ்டிக்க வேணுமென்பது, பெறப்படும். சங்கத்தை முன்னே கூறியது-மங்களப் பொருளாகையாலென்க. போய்ப்பாடு-பேரொலி; புகழுமாம். பாஞ்சசன்னியத்தைவிட இவைகட்கு ஏற்றம், பஞ்சலக்ஷங்குடியிலுள்ளார்க்கு உதவுவது. சங்கங்களே முதலிய இடத்து 'ஏ'-எண்ணுப்பொருளது. போய்ப்பாடுடையனவே என்ற ஏகாரம், எடுத்துக் கூட்டப்பட்டது.[2]

---

1. மணிவண்ணா என்றது—வடிவழகிலீடுபாடு. காதுகனாலும் விடவொண்ணாத வடிவழகு. ஆதலின், பெண்களைப் பிச்சேற்றுவது சொல்லவேண்டாவிறே. "மாலாய்ப் பிறந்தநம்பியை மாலே செய்யும் மணாளனை" என்னக் கடவதிறே.

* ஹோலோத்ஸவம்-ஹோளிபண்டிகை: காமன் பண்டிகை.

2. சங்கங்கள் என்றவிடத்துப் பன்மை மேல்வரும் 'பறை' முதலியனவற்றுக்கும் ஏற்கும். இவ்வளவும் கொடுக்கப்போமோ? என்று கண்ணன் கேட்ப, இவர்கள் 'உனக்கு அரியதுமுண்டோ?' என்ற கருத்தை 'ஆலினிலையாய்!' என்ற விளியால் புலப்படுத்துகின்றனர். இந்த விளிக்குப் பாவம் - சிறியதொருவடிவைக் கொண்டு ஸர்வலோகத்தையும் சிறுவயிற்றிலேவைத்து ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளும் நினக்கு முடியாததுமுண்டோ? லோகத்தில் இல்லாததையும் எங்களுக்காக உண்டாக்கவல்லை

இப்பாசுரத்திற்கு உள்ளுறை-பகவானை யடைவதற்கு வேண்டுஞ் சாதனங்களை வேண்டிக்கொள்ளுதல்: அவ்வாறு வேண்டும்போது, சரமசுலோகத்தில் 'மாம்' என்பதனால் விளங்கும் ஸௌலப்பியத்தை 'மாலே! மணிவண்ணா!' என்ற விளியினாலும், 'அஹம்' என்ற இடத்து ஏற்படும் வேறொருதுணை வேண்டாத உபாயத்வத்தை 'ஆலினிலையாய்' என்ற விளியினாலும் தெரிவிக்கின்றார். சங்கத்தொனி - ஓங்காரமென்று பிரசித்தமாகையால், சங்கமென்பது-ஓங்காரத்தில் ஆர்த்தமான சேஷத்வஜ்ஞானத்தையும், அதற்கு அடுத்துள்ள பறை - நமஸ்ஸப்தார்த்தமான பாரதந்த்ர்யஜ்ஞானத்தையும், பல்லாண்டிசைப்பாரென்பது - ஸாத்விகஸஹவாஸத்தையும், விளக்கென்றது-பகவச்சேஷத்வத்தையும் பிரகாசப்படுத்துகின்ற பாகவத ஶேஷத்வத்தையும், கொடி-சேஷத்வ லக்ஷணமான கைங்கர்யத்தையும், விதானம்-'அக்கைங்கர்யத்திற்பயன் அனுபவிப்பவன் நான்' என்ற புத்தியின் நிவ்ருத்தியையுங் காட்டுமென்பர். (26)

27. ‡‡கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா! * உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம் *
நாடு புகழும் பரிசினால் நன்றாக *
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே *
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்*
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு *
மூடநெய் பெய்து முழங்கை வழிவார *
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) கூடாரை-பகைவரை, வெல்லும் - சயிக்கின்ற, சீர்-குணத்தையுடைய, கோவிந்தா-கோவிந்தனே! கூடியிருந்து - (நீயும் நாங்களுஞ்) சேர்ந்திருந்து, குளிர்ந்து-மனங்குளிர்ந்து, நாடு புகழும் பரிசினால் - நாட்டிலுள்ளவர் கொண்டாடுகின்ற தன்மையாக,—சூடகமே - சூடகமும், தோள்வளையே - தோள்வளையும், தோடே-தோடும், செவிப்பூவே-கர்ணப்பூவும், பாடகமே-பாடகமும், என்று அனைய-என்று சொல்லப்படும் அவைபோன்றனவான, பல் கலன் உம்-பல ஆபரணங்களையும்,(நீ அணிவிக்க) யாம் நன்றாக

---

என்றபடி. ஈண்டு "களிர்மதிச்சடையனும் நான்முகக்கடவுளும்,... ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதும், அகப்படக்கரந்து ஓராலிலைச்சேர்ந்த எம், பெருமாமாயன்" என்றது நினைக.

இனி, உன் பாஞ்சசன்னியமே என்ற சொல்லுக்கேற்ப, பறைக்கு-தான் குடக்கூத்தாடியபோது திருவரையிற் கட்டிக் கொட்டிய பறையையும், பல்லாண்டிசைப்பதற்கு - தனக்குப் பல்லாண்டுபாடிய பெரியாழ்வாரையும், விளக்குக்கு-தன்குலவிளக்காகிய நப்பின்னையையும்,கொடிக்கு-தன் துவஜமாகிய பெரிய திருவடியையும், மேற்கட்டிக்கு-[திருவனந்தாழ்வான் தன்னையொழிய ஓரடியிடமாட்டாதவனாகையாலே] அத்தவாளத்தையுங்கொள்ளுங் கோள் என்றான் என்றுபொருள்கண்ட நயம் பாராட்டத்தக்கதே.

அணிவோம்-நாங்கள் இனிதாக அணிந்துகொள்வோம்; அதன் பின்னே-, (நீ உடுத்த), ஆடை உடுப்போம்-இனிதாகப்பட்டாடைகளை யுடுத்துக்கொள்வோம்;(பின்பு), பால்சோறு மூடநெய்பெய்து முழங்கைவழிவார-பாற்சோற்றை(த் தன்மிகுதியால்) மூடுமாறு நெய்யை வார்த்து (அச்சோற்றை) முழங்கைவழியாகப் பெருகும்படி (உண்ணுதலே),—உன்தன்னை-(உபேயமான) உன்னை, பாடி-(பாடுகையே ஸ்வயம் ப்ரயோஜநமாகப் புகழ்ந்து) பாடி, பறை கொண்டு - (விரதத்திற்குவேண்டிய) பறையைப் பெற்றுக் கொண்டு, [விரதத்தை யநுஷ்டித்து முடித்து], யாம் பெறு-நாங்கள் அடைய விரும்பிய, சம்மானம் - பஹுமானங்களாம்; (எ-று.)

'பெண்காள்! நீங்கள் நோன்புக்கு வேண்டியதைக் கேட்கிறீர்கள்; அதனைத்தருவோம்; நோற்றபின்பு பெறும்பேறு யாது?' என்று ஸ்ரீக்ருஷ்ணன் வினவினனாக, பெண்கள் 'நாங்கள் விரதத்தை முடித்தபின்பு, விரததினங்களில் விரதத்திற்கு உறுப்பாக நெய்பாலுண்ணமலும் மலரிட்டுமுடித்தல் முதலிய அலங்காரங்களைச் செய்துகொள்ளாமலும் இருந்துவிடியும்முன்பே எழுந்திருந்து பனிதுளிக்கத் தெருவேவந்து ஒருவரையொருவரெழுப்புதல் உன்னைத்துயிலெழுப்புதல் முதலான செய்கையால் வருந்திய வருத்தமெல்லாந்தீர, உன்னோடிருந்து, நீயும் நப்பின்னைப்பிராட்டியுமாகஎங்களையுண்பித்து அலங்கரிக்க,இவையே நாங்கள் பெறுஞ் சம்மானமாகும்' என்கிறார்கள். இனி, கோவிந்தா! யாம் பெறு சம்மானம் எவை எனில்? அணிவோம் உடுப்போம், குளிர்ந்து இருப்போம் என்னும் இவை என்று வருவித்து முடித்தலுமாம்.

'கூடாரை வெல்லுஞ்சீர்' என்ற தொடர்-கூடினார்க்குத்தோற்றுநிற்குமவனே! என்றகருத்தைக் குறிப்பிக்கும். ஸ்ரீ கிருஷ்ணன் 'நீ சொல்லிற்றுச் செய்வோம்' என்று இருந்த பாண்டவர்கட்குத் தான் தூதும் சாரத்தியமுஞ் செய்து, 'க்ருஷ்ணன் காலிலே வணங்கோம்' என்ற துரியோதனதியரை வென்றமை காண்க. 'கூடமாட்டோம் என்ற எண்ணமில்லாமலிருந்தாற்போதும்; கூடியிருப்போமென்ற எண்ணம் வேண்டுமென்ற நிர்ப்பந்தமுமில்லை பகவான் பாதுகாக்கைக்கு' என்பது, 'கோவிந்தா' என்ற விளியில் தோன்றும். 'க்ருஷ்ணன் பேரைச் சொல்லுதல்கூடாது' என்ற ஊரிலே இத்தனைநாள் அப்பிரானது திருப்பேரைச் சொல்லப் பெறாத இழவெல்லாம் தீரப் பாடப் பெற்றோமென்ற உவப்புத் தோன்ற 'உன்றன்னைப்பாடி' என்கிறார்கள். பறையென்பது-வ்யாஜமாத்திரம்; கைங்கர்யமே இவர்கட்கு உத்தேச்யம். யாம்-'உன்னாலே புருஷார்த்தம்' என்று அறிந்துள்ள நாங்கள். நாடு புகழும் பரிசு-'ஒருவன் கொடுத்தபடியே! சிலர் பெறும்படியே!' என்று நாட்டார் கொண்டாடும்படியாக. இவர்கள் இப்படிச்சொல்லுகிறது-நாட்டார் தங்களைப் புகழவேணுமென்ற விருப்பத்தினாலன்று; புகழ்ந்து அதனால் நாட்டிலுள்ளவர் உச்சீவிப்பது தங்கள் பேறாக நினைக்கையாலே. நன்றாக அணிகையும் ஆடையுடுக்கையு மாவன— இந்திர கொடுத்த ஹாரத்தைப் பிராட்டியையிடுவித்துத்திருவடியை அலங்கரித்தாற்போல,நப்பின்னைப்பிராட்டியை யிடுவித்துத் தங்களை அலங்கரிக்கையும், தாங்கள் உடுக்க

ஆரம்பிக்கையில் 'நீங்கள் உடுத்தபடி அழகிதன்று' என்று சொல் லித் தானே உடுத்துவதும். 'வார' என்று சொல்லியபிறகு 'உண்கை' என்ற வினையைச்சொல்லாது விட்டது-க்ருஷ்ணனு டைய சாந்நித்தியத்தாலே பரம திருப்தியை யடைந்த இவர்கட்கு உண்ணும்படி ஒன்றும் வேண்டாமையாலாம்.[1]

வடிவழகால் கோபிமார்களையும், ஸ்வரூபரூபகுணங்களா லுண்டான வைலக்ஷண்யத்தால் ஆழ்வார்களையும் இவையொன் றிலும் ஈடுபடாத எம்போல்வாரை அவ்வாழ்வார் முதலியவர் களின் சம்பந்தத்தை வ்யாஜீகரித்தும் ஈடுபடுத்தி, இப்படி சருவ சுலபனுனவன்பக்கல் நாங்கள் பெறப்பார்ப்பது-உன்னோடு ஸம் பந்தமில்லாதவன்று காப்புநாணும் திருவிலச்சினையும் ரஹஸ்யத் ரயங்களும் அவற்றிற் பிரதிபாதிக்கப்படுகிற ஜ்ஞாநபக்தி வைராக் கியங்களும் என்ற இவற்றை வேண்டாத நாங்கள் இப்போது அவற்றைவேண்டும்சேஷத்வ ஞானத்தைப் பூர்ணமாகப்பெற்று, அதற்கு மேலே கைங்கர்யப்ரார்த்தனையையும் அதையும் மறைக் கும் பாரதந்த்ர்ய குணத்தையும் வெளியிட்டு, போக்தாவான உன் னோடு போக்யரான நாங்கள் ஒன்றுபட்டிருந்து, இத்தனைநாள் பிரிந்திருந்த வருத்தமெல்லாந் தீரப்பெறுவது: இதுவே, எம் பெருமானுன உன்னிடத்து யாம் பெறுஞ்சம்மான மென்பது, இதன் உள்ளுறை. தோடு-ப்ரணவாகாரத்தை வடிவிஞற் குறிப் பதனுல், திருமந்திரத்தைக்காட்டுமென்பர். [27]

28. ‡‡கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்*
அறிவொன்று மில்லாத வாய்க்குலத்து*உன் றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம் *
குறைவொன்று மில்லாத கோவிந்தா!*உன் றன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது *
அறியாத பிள்ளைகளோ மன்பினுல்* உன் றன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே *
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) யாம் - நாங்கள், கறவைகள் பின் சென்று-கறவை களின் பின்னேயே (அவைகளை) யோட்டிக்கொண்டுபோய், கானம் சேர்ந்து-காட்டையடைந்து, உண்போம்-உடம்பை வளர்ப்போம்:

---

1. இந்த நயத்தைப் பின்வருமாற்ருல் உணரலாம். 'முழங் கைவழிவார' என்றவிடத்து நம்பிதிருவழுதிவளநாடுதாஸர் என் பார் 'நெய்படாதோ? என்று கேட்க, பட்டர் "க்ருஷ்ணஸந்நிதியா லே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்குச் சோறு வாயில் தொங் கிலன்றோ நெய்வாயில் தொங்குவது" என்று அருளிச்செய்தார். [இதன் நயம் 'முழங்கைவழிவார' என்றமையால், முழங்கையில் தானே வழிகின்றதேயொழிய நெய்வாயில் புகாதோஎன்று தாஸர் கேட்க, பட்டர், க்ருஷ்ணனது சாந்நித்தியத்தாலே பரமதிருப் தியை யடைந்த கோபிகைகளுக்குப் பாற்சோறு வாயிற்போனு லன்றோ நெய் வாயிற்புகுவது என்று விடையிறுத்தார் என்றபடி]

(அன்றியும் நாங்கள்), அறிவு ஒன்றும் இல்லாத-சிறிதும் புத்தி
யில்லாத, ஆய்க்குலத்து-இடைக்குலத்திலே (பிறந்து), உன்
தன்னை-உன்னை, பிறவி பெறும் தனை-(எங்களுடைய) பிறவியாகப்
பிறக்குமளவு, புண்ணியம் உடையோம்-புண்ணியமுடையவர்களா
யிருக்கின்றோம்: ஒன்றும்குறைவு இல்லாத-ஒருவகையாலும் ஒரு
குறையுமில்லாமலிருக்கிற, கோவிந்தா-கோவிந்தனே! உன்தன்
னோடு-உன்னோடு, நமக்கு-எமக்குள்ள, உறவு ஏல்-உறவோவென்
றால், இங்குஒழிக்க-இப்போது நீக்குவதானால், ஒழியாது-நீங்காது:
அறியாத பிள்ளைகளோம்-சிறு பெண்பிள்ளைகளாயிருக்கிற நாங்
கள், அன்பினால்-(உன்னிடத்துள்ள) பக்தியினால், உன் தன்னை-
உன்னை, சிறுபேர் அழைத்தனவும்-சிறுபேரையிட்டு அழைத்த
தைப்பற்றியும், நீ-(அடைந்தவரது தோஷத்தைக் குணமாகக்
கொள்ளுகின்ற) நீ, சீறியருளாதே-அருள்கொண்டு கோபியாதிரு:
இறைவா-தலைவனே! பறை தாராய்-(எங்களுடைய நோன்பிற்கு
வேண்டிய) பறையைத் தருவாயாக; (எ-று.)

''கீழ்ப்பிரார்த்தித்தவைகளை நாம்தருவதற்கு நீங்கள் என்ன
உபாயம் செய்தீர்கள்?'' என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் கேட்டன
னாக, இதனால், தங்களுடைய உபாயசூந்யதையை [யாதொருபாய
மும் தங்கள் பக்கல் இல்லாமையை]த் தெரிவிக்கிறார்கள். 'கற
வைகள் பின்சென்று *** உண்போம்' என்பது-'பசுக்கள் கறப்ப
தனால் உண்ணக்கிடைக்குமென்று அவற்றின்பின்னே சென்று
மேய்க்கின்றோமேயன்றிப் பசுவைக்காத்தல் குலதருமமென்று
நினைத்துப் பசுவைக் காத்தலையுஞ் செய்யாத எங்களுக்கு, குருகுல
வாஸம் அத்தியயனம் கர்மாநுஷ்டாநம் இந்திரியஜயம் பகவத்
ஸ்வரூபத்யானம் முதலிய ஸாதநஸம்பத்து எங்ஙனே ஸித்திக்
கும்?' என்பதையும், 'கானஞ்சேர்ந்து' என்பது-'கோயில் திருமலை
பெருமாள்கோயில் என்றாற் போன்ற திவ்யதேசங்களிலே பசுக்
களை மேய்த்தலென்பதை வியாஜமாகக்கொண்டு தங்கி அதனால்
க்ஷேத்ரவாசரூபமான புண்ணியத்தையும் நாங்கள் பெறவில்லை'
என்பதையும், 'உண்போம் அறிவொன்றுமில்லாத' என்பது
'ஆஹாரசுத்தியில்லாமற் கண்டபடியுண்பதனால் ஜ்ஞாநபக்தி
யோகங்களுக்கு உரிய அறிவு எங்களுக்கு எங்ஙனேயுண்டாகும்?'
என்பதையும், 'உன்றன்னைப் பிறவிபெறுந்தனை புண்ணியம்
யாமுடையோம்' என்பது-ஸித்தோபாயமாய் ஸாக்ஷாத்புண்யமான
உனக்குப் பாலுஞ்சோறும் இட்டு வளர்க்கின்றோமே; அசேதநங்
களும் அஸக்தங்களுமாகையாலே பயனைவிளைப்பதில் பரமசேத
நனுடையகைபார்த்திருப்பனவான கர்மம்ஜ்ஞானம்பக்தி ப்ரபத்தி
முதலிய ஸாத்தியமான உபாயாந்தரங்கள் எங்களுக்கு வேண்
டுமோ?' என்பதையும், 'குறைவொன்றுமில்லாத கோவிந்தா' என்
பது-'நீ பரிபூர்ணனாயிருந்தும் இந்த ஆய்க்குலத்திலே பிறந்தது,
ஒன்றுமறிவொன்றில்லாத கோபாலரை யீடேறச்செய்வதற்கே
யன்றிஎங்களால் ஏதேனும் பெறுதற்கோ?' என்பதையும்காட்டும்.

உன் தன்னோடு உறவு-நீ மைத்துனன் நம்பி, நாங்கள் மாமி
மார்மக்கள், இவ்வுறவு: பரிபூர்ணனான உன்னோடு உன்முன்
னிலையை விரும்புகின்ற எங்கள் உறவு: தயாபூர்ணனான உன்னோடு
தயநீயரான எங்கட்கு உண்டான உறவு. ஸ்வாபதேசத்தில்

'பிதாசரக்ஷக ஶ்ஶேஷீ, பர்த்தாஜ்ஞேயோரமாபதி: - ஸ்வாம்யாதா ரோமமாத்மாச, போக்தாசாயமநூதித:' என்பதிற்சொல்லிய பிதா புத்ர ரக்ஷ்யரக்ஷக ஶேஷஶேஷிபாவ ஆதிகளான நவவிதஸம்பந்தங்கள்.† உன்றன்னோடு உறவுஎல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது-உன்னோடு உண்டான ஸம்பந்தம் உன்னாலும் விடவொண்ணாது: எங்களாலும் விடவொண்ணாது: இருவரும் சங்கேதஞ் செய்து கொண்டாலும்விடவொண்ணாது'; "நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே! நீ என்னையன்றியிலை" என்றதுங் காண்க. சிறுபேர்-நாராயணனென்பது;[1] தங்களுக்கு அஸாதாரணனென்பதைத் தெரிவிக்கின்ற 'கோவிந்தன்' என்ற பெயரிருக்க, அதைவிட்டு, எல்லார்க்கும் பொதுவான உறவுமுறையைத் தெரிவிக்கின்ற திருப்பெயரைச் சொன்னால் எம்பெருமான் குற்றமாகக் கொள்ளுவன்;[2] எம்பெருமான் தான் அடியவர்கட்கு எளியவனாயிருத்தலைத்தெரிவிக்கவேணுமென்றிருக்க, அப்பெருமானுடைய திருவுள்ளத்துக்கு மாறாகப் பரத்துவநிலையைத் தெரிவிக்கின்ற பெயரைச் சொல்லுதல் இழுக்கேயாம்: அந்நிலையைவிட அடிய

---

† நவவித ஸம்பந்தங்கள்—

| | ஈஸ்வரன் அல்லது பரமாத்மா | சித் அல்லது ஜீவாத்மா |
|---|---|---|
| 1. | பிதா | —புத்திரன் |
| 2. | ரக்ஷகன் (காப்பவன்) | —ரக்ஷ்யன் (காக்கப்படத்தக்கவன்) |
| 3. | சேஷீ (உரிமையுடையான்) | —சேஷன் (உரிமையாகுபவன்) |
| 4. | பர்த்தா (தாங்குபவன்) | —பார்யா (தாங்கப்படத் தக்கவள்) |
| 5. | ஜ்ஞேய:(அறியப்படுமவன்) | —ஞாதா (அறிபவன்) |
| 6. | ஸ்வாமி (பொருளையுடையான்) | —ஸ்வம் (பொருள், சொத்து) |
| 7. | ஆதார:(தாங்கும்பொருள்) | —ஆதேயம் (தாங்கப்படுபொருள்) |
| 8. | ஆத்மா (சரீரி) | —சரீரம் |
| 9. | போக்தா (அநுபவிப்பவன்) | —போக்யம் (அநுபவிக்கப்படும்பொருள்) |

எனவே, ஒன்பது விதத்தில் பரமாத்மாவைவிட்டு ஜீவாத்மா பிரிந்து நில்லாமையையும், ஜீவாத்மாவை விட்டுப் பரமாத்மா வேறுபட்டுப் பிரிந்து நில்லாமையையும் கண்டு தெளிந்து, ஈஸ்வரனிடம் நீங்காது பரமபக்தியுடன் அன்பு பற்றிநிற்றல் வேண்டும் என்பது பெற்றும்.

1. பெரியநாமம் சிறுத்தது க்ருஷ்ணவதாரத்தில்.

2. 'நீர்மை சம்பாதிக்கப் போந்தவிடத்தே மேன்மை சொல்லுகை குற்றமிறே!'

வர்க்கு எளியனை இங்கிலேயே பகவானுக்கு விருப்பமாகும்; ''திவத்திலும் பசுநிரைமேய்ப்பு உவத்தி'' என்றது காண்க. கீழ் ''நாராயணனே'' என்றும், ''நாற்றத்துழாய்முடி நாராயணன்'' என்றும், ''நாராயணன் மூர்த்தி'' என்றும் பலகாலும் சொன்னதனால், 'அழைத்தன' என்கிறார்கள். அறிவில்லாத குலத்திற் பிறந்து சிறுபிள்ளைகளாய்ப்பிரீதிபரவசராய்ச் சொல்லிய எங்களை, உபாயமாயிருக்கிற நீயே பொறுத்தருளி எங்கள் விருப்பத்தை முடித்துத்தர வேண்டுமென்பார் 'அறியாத பிள்ளைகளோம் அன்பினால் ...அழைத்தன சீறியருளாதே: தாராய்பறை' என்கின்றனர்.

§ 'இறைவா' என்றது வானோரிறையை நினைத்தன்று; ஆய்க்குலமாய் வந்து தோன்றின நம்மிறை என்றபடி.

'கறவைகள் பின் கானஞ்சென்று, அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து' என்கையால்-அறிவில்லாத பசுக்களோடு பழகுதலாகிற தங்களுடைய தாழ்வையும், 'சென்று சேர்ந்துண்போம்' என்கையால்- தமக்கு ஸத்கர்மமொன்றுமில்லாமையையும், 'உன்தன்னைப்பிறவிபெறுந்தனைபுண்ணியம்யாமுடையோம், உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்பதனால்-பகவானோடு தமக்கு உண்டான ஸம்பந்தத்தையும், 'குறைவொன்றுமில்லாத கோவிந்தா!' என்பதனால்-அப்பகவானுடைய குணபூர்த்தியையும், 'அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே' என்பதனால்-முன்னே செய்த குற்றங்களுக்கு க்ஷாமணம்பண்ணுதலையும் கூறி, 'இறைவா! நீ தாராய் பறை' என்பதனால்-ஸாக்ஷாத் உபாயமான சருவேசுவரனிடத்திற் ப்ராப்யாபேக்ஷையைத் தெரிவிக்கிறார்களென்க. எம்பெருமானை உபாயமாகப்பற்றின அதிகாரிக்குஅதிகாரபூர்த்தியுண்டாவதற்கு, இங்குக்கூறிய ஆறும் இன்றியமையாதனவாம்.

இந்தப்பாசுரத்தில் த்வயத்தின் பூர்வகண்டார்த்தமான உபாயஸ்வரூபம் வெளியிடப்பட்டது: அடுத்த பாசுரத்தில் உத்தரகண்டார்த்தமான உபேயஸ்வரூபம் வெளியிடப்படும். (28)

29. ‡‡சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து* உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்*
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்திற் பிறந்து*நீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது*
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா!*
எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் *உன்றன்னோடு
உற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்*
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

(இ-ள்.) சிற்றஞ்சிறு காலே-மிக்க விடியற்காலத்திலேயே, வந்து-(நீ யிருக்குமிடத்தில்) வந்து, உன்னை சேவித்து-உன்னை வணங்கி, உன் பொன் தாமரை அடியே-உனது அழகிய தாமரை மலர்போன்ற திருவடிகளையே, போற்றும் பொருள்-(நாங்கள்) மங்களாசாசநஞ் செய்கின்றதன் பிரயோசனத்தை, கேளாய்-(பராக்

இல்லாமல்) கருத்துடன் கேட்பாய்: நீ—,பெற்றம் மேய்த்து உண்ணும்-மாடுகளைமேய்த்து (அவை யுண்டது கண்டபின்)உண்கின்ற, குலத்தில்-குலத்திலே, பிறந்து-பிறந்துவிட்டு, எங்களை குற்றேவல் கொள்ளாமல்-எங்களிடத்தில் பணிவிடைகளைக் கொள்ளாமல் (விட்டுவிடுவது), போகாது-(உனக்குத்)தகாது; இற்றை-இப்போது, (நாங்கள் வந்தது), பறை-பறையை, கொள்வான் அன்று-கொள்ளும் பொருட்டாகவன்று; கோவிந்தா-கோவிந்தனே! நாம்-நாங்கள், எற்றைக்கும்-எப்போதும், ஏழ் ஏழு பிறவிக்கும்-(நீ எடுக்கும்)எந்த அவதாரத்திலும், உன் தன்னோடு உற்றோமே ஆவோம்-(இப்போதிருப்பது போலவே) உன்னோடு பொருந்தியவர்களாகவே யிருக்கவேணும்; உனக்கே ஆள்செய்வோம்-உனக்கேயடிமை செய்பவர்களாகவும் வேணும்; மற்றை-(இவைகளை விட) வேறுபட்ட,நம் காமங்கள்-எங்கள்விருப்பங்களை,மாற்று-போக்கு:(எ-று)

இப் பாசுரத்தில், தாங்கள் நோன்பு நோற்பதென்பதும் அதற்கு வேண்டியவைகளை ஸ்ரீகிருஷ்ணன் தருவானென்பதும் ஒரு வியாஜமே; தங்களுடைய முக்கியமான கருத்து-பகவத்கைங்கர்யமேயா மென்பதைச் சொல்லி, இப் பிரபந்தத்தின் பரமதாத்பர்யத்தை வெளியிடுகிறார்கள்.

'சிற்றஞ்சிறுகாலை வந்து உன்னைச் சேவித்து-போற்றும்' என்ற இடத்தில்—உன் வரவை எதிர்பார்த்திருக்கையில் நாங்கள் இருக்கின்ற இடத்தில்வந்துநீயே உதவவேணும்: அப்படியிருக்க, நீ இருக்குமிடத்திற் சிறுகாலையிலும் உன்னைக்காணவொண்ணாதென்று சிற்றஞ் சிறுகாலையில்தானே வந்தோம். நாங்களே வந்ததும், வந்ததோடு நில்லாமல் உன்னைச் சேவித்து மங்களாசாஸநஞ் செய்ததும், எங்களுடைய ஆதராதிசயத்தைக்காட்டுமென்றவாறு. எம்பெருமான் தானே நம்முடையவிலக்காமையையே பற்றாசாகக்கொண்டு நம்மை இரட்சிப்பவனாயிருக்க அவனை நாம் நாடுவதும் மிகையேயாமென்பதை "எழுதுமென்னுமிதுமிகையாதலின்" என்பது முதலிய இடங்களிற் காணலாம். "உன்" 'பொன்' 'தாமரை' என அடிக்கு மூன்று விசேஷணமிட்டது-எம்பெருமானது திருவடிகள் பராப்தமும் அநர்க்க [விலையற்றவை]மும் போக்யமுமானவை என்று அறிவித்தற்காக. பெற்றம் மேய்த்துண்ணும் குலத்திற் பிறந்து நீ குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது-நீ பரத்வத்தை விட்டுச் சௌலப்யத்தை உலகத்தார்க்கு வெளியிடவேணுமென்றே திருவவதரித்திருத்தலால், எங்கள் பிரார்த்தனையைத் தலைக்கட்டாமற் போனால் நீ திருவவதரித்த பயனை இழந்தவனாவாய் என்றபடி: இப்படி இவர்கள் சொல்லுமளவில், உங்கட்கு வேண்டிய பறையைத் தருகின்றேனென்று நோன்புக்கு வேண்டியதைத் தரப் பார்க்க, இவர்கள் 'கண்விழிப்பதற்கும் அரிதாய் மிகவுங் குளிர்கிற இவ்விடியற் காலத்துக் கண்விழித்து எழுந்து வந்து உன்னைக்கிட்டி மங்களாசாஸனஞ் செய்கின்றது-பறையைப் பெறுதற்கு அன்று; உன்னுடைய கைங்கர்யத்திலே யீடுபாட்டினாலேயாம்; ஆகவே, எப்போதும் உன்னோடு எங்கட்கு உள்ள சம்பந்தத்தை மறவாமல், உனக்கு அடிமை செய்யும்படியும் ப்ரக்ருதிவாசனையால்மனஞ்சலித்து நாட்

டார் விரும்புகிற கூடகம் முதலியவற்றில் எங்கள் மனம் செல்லா தபடியும் அருள் புரியவேண்டும்' என்கின்றனரென்பதாம்.[1]

கோவிந்தனென்பது-பூமியை (மஹாவராஹமாக அவதரித்து) எடுத்து நோக்கினவனென்றும், பூமியை (வாமனனாக நீரேற்றுப்) பெற்றவனென்றும், வேத சப்தத்தை (ஹம்ஸரூபியாகப்) பிரித்தெடுத்தவனென்றும், வேதத்தை (ஹயக்ரீவரூபியாகப்) பிரகாசிப்பித்தவனென்றும், (சூரிய) கிரணத்திற்குள்ளே இருப்பவனென்றும், [கோ என்பது- பூமி வாக்கு கிரணம் பசு என்ற பல பொருளையும், வித் என்ற வினையடி [தாது] பல பொருளையும் உடையதாதல் காண்க.] வேறு பலபொருள்படுமாயினும், இடைச்சிறுமியரான நாங்கள் அவ்வாறான நிலைமையைச் சொல்லவில்லை; பசுக்களை மேய்ப்பவனாகப் பிறந்த நிலைமையையே சொல்லுகிறோமென்பதற்காக, 'பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்திற் பிறந்து' என்கிறார்கள். மற்றை நங்காமங்கள் மாற்று-ப்ராப்யமான் கைங்கர்யத்திலேகளையாகத் தோன்றும் ஸ்வப்ரயோஜநபுத்தியைப் போக்கு என்றபடி. இற்றை, எற்றை-இன்று என்று என்பவை திரிந்து ஐகாரச்சாரியைபெற்றன. 'சிற்றஞ் சிறுகாலே' என்றும், 'குலத்திற் பிறந்த நீ' என்றும் ஓதுவர். (29)

30. ‡‡வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை *
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி *
அங்கப் பறைகொண்ட வாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியற் பட்டர்பிரான் கோதைசொன்ன*
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே *
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத்தோள் *
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்.

(இ-ள்.) திங்கள் திரு முகத்து-சந்திரன் போன்ற [குளிர்ந்த] அழகிய முகத்தையுடையவரும், சேய் இழையார்-அழகிய ஆபர

---

1. இனி (குற்றேவல் என்பது அந்தரங்ககைங்கரியம். அஃதாவது, "கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யுந் தவந்தானென்" என்ற நாச்சியார்திருமொழியா லுய்த்துணர்ந்துகொள்க. மற்றும், ஆயனாகி (எங்கள்) ஆயர்மங்கை வேயதோள் விரும்பினவனன்றோநீ! இமில் ஏற்று வன்கூன் கோட்டிடைக் கூத்தாடியது எங்கள் அடலாயர்தம் கொம்பினுக்காக வன்றோ! எனவே, நப்பின்னையை அநுக்கிரகித்தாற்போலே எங்களையும் அநுக்கிரகிக்க வேணும் என்கிறார்கள். எங்களை - பசுக்களுக்கு வேறு ரக்ஷகருண்டானாலும் உன்னையொழிய ரக்ஷகரில்லாத எங்களை என்றபடி. 'கொள்வானன்று காண்' என்றவிடத்து ஆறாயிரப்படி வியாக்கியாநம் சாலவழகிது:"எங்களை நீ கொள்ளுமத்தனையொழிய, நாங்கள் உன் பக்கலிலே உன்னையொழியவுங் கொள்வதொன்றுண்டு என்றிருந்தாயோ" என்றவாறு.

ணங்களைப் பூண்டவருமான இடைச்சிறுமியர், வங்கம் கடல்-கப்பல்களையுடைய திருப்பாற்கடலை, கடைந்த-(தேவர்கட்கு அம்ருதம் கொடுப்பதற்காகக்) கடைந்தருளின, மாதவனை-ஶ்ரியஃபதியும், கேசவனை-கேசியென்ற அசுரனைக் கொன்றவனுமான ஸ்ரீக்ருஷ்ணனை, சென்று-போய்க்கிட்டி, இறைஞ்சி-மங்களாசாசனம்பண்ணி, அங்கு-அங்கே [கிருஷ்ணன் சந்நிதியில்], பறை கொண்ட-(தங்கள்) புருஷார்த்தத்தைப் பெற்ற, அ ஆற்றை-அந்தச் செய்தியை, அணிபுதுவை பைங்கமலம் தண்தெரியல் பட்டர்பிரான் - அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்த பசுமை பொருந்திய தாமரஸபுஷ்பத்தினாலாகிய குளிர்ந்த மாலையையணிந்துள்ள பெரியாழ்வாருடைய, (திருமகளாரான), கோதை-ஆண்டாள், சொன்ன-அருளிச்செய்த, சங்கம்-திரள் திரளாக அனுபவிக்க வேண்டிய, தமிழ்மாலை-தமிழ்ப் பாமாலையாகிய, முப்பதும்-இந்த முப்பதுபாசுரங்களையும், தப்பாமே -(ஒருபாசுரமும்) குறையாமல், இங்கு-இக்காலத்திலே [அல்லது இந்தஸம்ஸாரத்திலே], (ஆண்டாளைப்போன்ற பக்தியில்லாவிட்டாலும்), இ பரிசு-இந்த ப்ரகாரமாக [பாசுரமாத்திரமாக], உரைப்பார்-அநுஸந்திப்பவர்கள்,—ஈர் இரண்டு மால் வரை தோள்-நான்கு பெரிய மலைகள் போன்ற திருத்தோள்களையும், செம் கண் திருமுகத்து-சிவந்த திருக்கண்களைக்கொண்ட அழகிய திருமுகத்தையும், செல்வம்-உபயவிபூதியையுமுடைய, திருமாலால் - ஶ்ரியஃபதியினாலே, எங்கும்-(இம்மை மறுமை என்ற) எல்லா இடங்களிலும், திருவருள் பெற்று-(அப்பரமனுடைய) பெருங்கருணையையடைந்து, இன்பு உறுவர்-(எம்பெருமானுடைய சேர்க்கையாலுண்டான) பரமானந்தத்தைப் பெறுவர்; (எ-று.)

இந்தப்பாசுரத்தால், இந்தப்பிரபந்தத்தைக் கற்றவருக்கு, நோன்பை அநுஷ்டித்துப் பயனைப்பெற்றவரைப்போலவும், அதனை அநுகரித்துப் பயனைப்பெற்றாரைப்போலவும், பிராட்டியாலும் எம்பெருமானாலும் ஸர்வகாலமும் திருவருள்செய்யப் பெற்று மகிழ்ந்திருத்தலாகிய பயன் சித்திக்குமென்றதாயிற்று: 'கன்று இழந்த தலைநாகு தோற்கன்றுக்கும் இரங்குமாபோல, இப்பாசுரங்கொண்டுபுக நமக்கும் பலிக்கும்' என்று பட்டர் அருளிச்செய்வராம்.[1] இந்தப்பாசுரம்-பயனைத் தெரிவித்தலால், பலச்ருதியென்னப்படும்: இன்னார் செய்தது இந்தப்பிரபந்தமென்று தெரி

---

1. பட்டர் அருளிச்செய்ததற்கு ஏது:—

'சேயிழையார் சென்றிறைஞ்சி அங்கப்பறை கொண்டவாற்றை'' என்றதால், அநுஷ்டித்தார் கோபிமார் என்பது குறிக்கப்பட்டது. 'கோதைசொன்ன' என்றதால், அநுகரித்தார் கோதையார் என்பது குறிக்கப்பட்டது. 'இப்பரிசு உரைப்பார்' என்றதால், இப்பிரபந்தம் கற்பார் குறிக்கப்பட்டது. இதன் மேலெழும் வினாயாதெனில், அநுஷ்டித்தார்க்கும் அநுகரித்தார்க்கும் உள்ள பலன் இப்பிரபந்தத்தைச் சொன்ன மாத்திரத்திலே சொன்னவர்க்கு ஸித்திக்குமோ? என்பது. அதற்கு விடையாக ஏற்பட்டது, பட்டர் ஸ்ரீஸூக்தி. [தலைநாகு-பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும், கன்று-அநுஷ்டித்தார்க்கும் அநுகரித்தார்க்கும், தோற்கன்று-நம்போல்வார்க்கும் எனக்கொண்டு ஒப்புக்காண்க.]

வித்தலால், திருநாமப்பாட்டு எனவும்படும். இது, தன்னைப் பிறன் போல வைத்துக் கூறும் ஒருவகைக் கவிசமய மாதலால், தற்புகழ்ச்சியாகா தென்க.

கடல்கடைந்த மாதவன்-கடலைக்கடைந்து லக்ஷ்மியைப் பெற்றவன்; தேவர்கள்காரியமென்று பேரிட்டு லக்ஷ்மியைப்பெற்ற அது, ஊரார்காரியமாகியநோன்பு என்ற பேரையிட்டுத் தங்களைப் பெறுதற்குச் செய்த இதனோடு ஒத்திருத்தலாற் பாராட்டிச் சொல்லுகிறார்கள்; அன்றி, பிரயோஜநாந்தரத்தை வேண்டுவார்க்கும் வருந்தி அதனைச்செய்து தந்தவன் அவனைப்பெறுகையையே ஸ்வயம்ப்ரயோஜநமாகவுடைய நம்முடையகாரியத்தைத் தவறாது பூர்த்தி செய்வானென்பதற்காகக் கூறியதுமாம். ஆஸ்ரயித்தவருடைய குற்றத்தைப் புருஷகாரத்தாலே பொறுப்பித்து அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டுமவள் அருகேயிருக்கப்பெற்ற ஸ்ரியபதியே ப்ராப்யமென்க. கேசவன்-விரோதிநிரஸநசீலன்: ஸ்வாபதேசத்தில், ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்யசேஷத்வத்தையும்போக்கினவன். ஸ்ரீக்ருஷ்ணனுடைய சேர்க்கைகிடைத்ததனால், இவர்கள் திங்கள் திருமுகத்தவராயினர். சேயிழையார்-க்ருஷ்ணனும் நப்பின்னைப்பிராட்டியும் கூட விருந்து பூட்டிய ['சூடகமே' இத்யாதியிற்சொன்ன] ஆபரணங்களை யுடையவர்கள்: ஜ்ஞாநவிரக்தியையுடையவரென்று ஸ்வாபதேசம்.

தாமரைமாலை, பிராமணர்கட்கு உரியது. வித்வான்களை வென்று கிழியறுத்ததனால், 'பட்டர்பிரான்' என்று பெரியாழ்வார்க்குத் திருநாமம்: பட்டர்-வித்வான்களுக்கு, பிரான்-தலைவர். பஞ்சலக்ஷங்குடியிலுள்ளார் அநுஷ்டித்த நோன்பை அநுகரித்து அருளிச்செய்த இந்தப்பிரபந்தம் "குழாங்களாயடியீருடன்" என்றபடி கூட்டமாயிருந்து அநுஸந்தித்து அநுபவித்தற்கு உரியதாமென்பதுகொண்டு 'சங்கத்தமிழ்' என்றது; இனி, சங்கம்-வித்வான்களின் கூட்டத்தாற் கொண்டாடப்படுகின்ற எனினுமாம். ஈரிரண்டுதோள்-"உகவாதார்க்குத் தோள்கள் இரண்டாய்த் தோற்றும்: இவர்கட்கு நான்காய்த்தோற்றும்." மால்வரைத் தோள்-பண்டு பாடினவர்கள் சொல்வழியாலே அநுஸந்தித்தலால் அநுஸந்திப்பவர்களின் தன்மையைப் பாராதே, எம்பெருமான் தோள்கள் பூரிக்கும். செங்கண்-ஆஸ்ரிதவாத்ஸல்யத்தாற் சிவந்த கண். "விடிவோறை யெழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுசந்தித்தல், மாட்டிற்றிலனாகில் சிற்றஞ்சிறுகாலை என்ற பாட்டை அநுசந்திக்தல், அதுவும் மாட்டிற்றிலனாகில் நாம் இருந்த இருப்பை† நினைப்பது' என்று பட்டர் அருளிச்செய்வாராம்.

வங்கம்-பங்கம் என்ற வடசொல்லின் விகாரமெனக்கொண்டு, அலையென்று பொருளுரைக்கலாம்: சேயிழை—செம்மை + இழை.

முதற் பாசுரத்தில் நோற்க இசைந்தவர்களைப் பொதுவாக அழைத்து, 2—ஆம் பாசுரத்தில் நோற்கின்ற தாம் செய்வன தவிர்வனவற்றை விளக்கி, 3-ஆம் பாசுரத்தில் நோன்பினால் நாட்டிற்குவிளையும் பயனைச்சொல்லி, 4-ஆம் பாசுரத்தில் மழைக்

† 'நாமிருந்த விருப்பை' என்றது, இந்தப்பிரபந்தத்தை அநுஸந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை என்றபடி.

கடவுளை மழைபெய்யவேணுமென்று நியமித்து, 5-ஆம் பாசுரத்தில் எம்பெருமானைப் பாடினால் நோன்புக்கு மாறுகத்தோன்றுந் தடைகளெல்லாம் ஒழியும் என்று அருளிச்செய்து, 6-ஆம் பாசுரந் தொடங்கி 15-ஆம் பாசுரம் முடியும் அளவும் தம்மோடொத்தவர்களை யெழுப்பி எல்லாரும் திரண்டு நந்தகோபர் திருமாளிகை வாசலிற் சேர்ந்து, 16-ஆம் பாசுரத்தில் கோயில்காப்பானையும் தோரணவாசல்காப்பானையும் உணர்த்தி அவன் அனுமதி கொண்டு புகுந்து, 17-ஆம் பாசுரத்தில் நந்தகோபர் யசோதைப் பிராட்டி ஸ்ரீகிருஷ்ணன் பலராமனை இவர்களை யுணர்த்தி, 18-ஆம் பாசுரத்திலே புருஷகாரபூதையான நப்பின்னையை முன்னிட்டுப் போகவேணுமென்று அவளை யெழுப்பி, 19, 20-ஆம் பாசுரங்களில் அடைந்தாருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதில் ஒருவரினும் ஒருவர் விஞ்சுகின்ற நப்பின்னை ஸ்ரீகிருஷ்ணன் என்ற இருவரையும் துயிலுணர்த்தி, 21-ஆம் பாசுரத்தில் ஸ்ரீகிருஷ்ணனைத் துயிலுணர்த்தித் தாங்கள் குணத்துக்குத் தோற்றுவந்த படியையறிவித்து, 22-ஆம் பாசுரத்தில் தாங்கள் அபிமானங் குலைந்து வந்தமையால் தங்கள் எளிமையெல்லாம்தீர மெல்லமெல்லக் கடாக்ஷிக்கவேணுமென்று பிரார்த்தித்து, 23-ஆம் பாசுரத்தில் சீரிய சிங்காதனத்தில் வீற்றிருந்து தாங்கள் வந்தகாரியத்தை ஆராயவேணுமென்று பிரார்த்தித்து, 24-ஆம் பாசுரத்தில் இவர்கள் பிரார்த்தனைப்படியே வீற்றிருந்தமைக்கு மங்களாசாஸனஞ் செய்து, 25-ஆம் பாசுரத்தில் தாங்கள் அருத்தித்துவந்தமையை விண்ணப்பித்து, 26 - ஆம் பாசுரத்தில் நோன்புக்கு வேண்டுமவை இன்னவை என்று அபேட்சித்து, 27-ஆம் பாசுரத்தில் நோன்புமுடிந்தபின் பெறும் சம்மானத்தை விண்ணப்பித்து, 28-ஆம் பாசுரத்தில் தங்களுடைய சிறுமையையும் அவன் பெருமையையும் உறவையும் அநுசந்தித்து அபராதக்ஷாமணஞ் செய்துகொண்டு, 29 - ஆம் பாசுரத்தில் தங்களுடைய பரம உத்தேசியம் இன்னதென்று விண்ணபபித்துப் பெற்று, 30-ஆம் பாசுரத்தில் இவ்வாறு இடைச்சிறுமியர் ஸ்ரீகிருஷ்ணனிடத்துத் தமது மனோரதத்தை வேண்டிப்பெற்றபடியை ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த இந்தப் பிரபந்தத்தை அநுஸந்திப்பார்க்கு உண்டாகும் பயனை உணர்த்துகின்றார்.

பகவானைக்கிட்டிக் கைங்கர்யஞ் செய்வதிலுள்ள பரபரப்பினால், ஒரு வியாஜத்தை மேற்கொண்டு, பாகவதர்களையெல்லாம் திரட்டி எம்பெருமானது திருக்கோயிலையடைந்து திருப்பள்ளியுணர்த்தி, தமது பிரார்த்தனைப்படியே அப்பரமன் சிங்காசனத்தில் வந்து வீற்றிருக்க, அப்பரமனுக்கு மங்களாசாசனஞ் செய்து அபராத க்ஷாமணபூர்வமாக அப்பரமனது கைங்கர்யத்தைப்பெற்றதை உணர்த்துகின்ற இந்தத் திவ்யபிரபந்தம், ஸ்ரீவைஷ்ணவர்களாயுள்ள அனைவர்க்கும் மிகவும் ஆதரணீயமாகும்.

அடிவரவு:—மார்கழி வையம் ஓங்கி ஆழி மாயன் புள்ளு கீசு கீழ்வானம் தூமணி நோற்று கற்று கனைத்து புள்ளின் உங்கள் எல்லே நாயகன் அம்பரம் உந்து குத்து முப்பத்து ஏற்ற அங்கண் மாரி அன்று ஒருத்தி மாலே கூடாரை கறவை சிற்றம் வங்கம் தை.

**திருப்பாவை முற்றிற்று.**

கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்*—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்.

பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

---

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கற் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த மூவாயிரப்படி மிகவும் பிரசித்தமாதலின், அன்னார்மேல் அடியேன் செய்துள்ள வாழி திருநாமத்தை இறுதியிற் சேர்த்துள்ளேன்.

## பெரியவாச்சான்பிள்ளை வாழிதிருநாமம்

“ ஆவணியி லுரோகிணிநா ளவதரித்தான் வாழியே
ஆழ்வார்கள் சொற்பொருளை யாய்ந்துரைப்போன் வாழியே
நாவலத்தால் நூல்கள்பல நவின்றளித்தோன் வாழியே
நன்கிருபத்து நாலாயிரப் படிநயந்தோன் வாழியே
தேவரேன நம்பிள்ளை தாள்தொழுவோன் வாழியே
தெய்வநகர்ச் சேங்கநல்லூர் செழிக்கவந்தோன் வாழியே
பூவலயத் தரங்கநகர் புகழுநின்றேன் வாழியே
பெரியவாச் சான்பிள்ளை பொற்பதங்கள் வாழியே.

[ஸ்ரீ. ஜகந்நாதாசார்யர்.]

---

சீயர் திருவடிகளே சரணம்.

இதனடியிற் குறித்துள்ள புத்தகங்கள் வை. மு. நரசிம்மன், (வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யர் குமாரர்) வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி, 17. தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 என்ற விலாசத்திற் கிடைக்கும்:—

## வை. மு. கோ. & சே. கி. பதிப்புகள்.

### கம்பராமாயணம்:—

| | | ரூ. ந.பை |
|---|---|---|
| *பாலகாண்டம்* | *உரையுடன்* | *8—50* |
| *அயோத்தியா காண்டம்* | ,, | *8—50* |
| *ஆரணிய காண்டம்* | ,, | *8—50* |
| *கிட்கிந்தா காண்டம்* | ,, | *8—50* |
| *சுந்தர காண்டம்* | ,, | *8—50* |
| *யுத்த காண்டம் 1-வது வால்யூம்* | ,, | *8—50* |
| ,, *2-வது* ,, | ,, | *9—00* |

### வில்லிபாரதம்:—

| | | |
|---|---|---|
| *ஆதிபருவம்* | *உரையுடன்* | ... *4—00* |
| *சபாபருவம்* | ,, | ... *4—00* |
| *ஆரணியபருவம்* | ,, | ... *4—00* |
| *விராடபருவம்* | ,, | ... *2—00* |
| *உத்தியோகபருவம்* | ,, | ... *3—50* |
| *வீட்டும துரோண கன்ன பருவங்கள்* | ,, | ... *8—75* |
| *சல்லிய சௌப்திக பருவங்கள்* | ,, | ... *2—75* |

### திருக்குறள்:—

| | | |
|---|---|---|
| அறத்துப்பால் *பரிமேலழகருரையுடனும் அதற்குக் குறிப்புரையுடனும்* | | ... *2—50* |
| பொருட்பாலும் காமத்துப்பாலும் | ,, | ... *5—50* |
| மூன்றுபாலும் | ,, | ... *8—50* |

*(பரிமேலழகருரைக்கு எழுதியுள்ள குறிப்புரைகள் கற்போர்க்குப் பரிமேலழகரின் உரைக்கருத்துக்களை ஐயந் திரிபுஅற விளக்குவதோடு அவர்களைச் சிறந்த புலவராக்கும்: இது, திண்ணம்)*

### பத்துப்பாட்டு:—

| | | |
|---|---|---|
| *திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சியுரையுடன்* | | ... *0—62* |
| *சிறுபாணாற்றுப்படை* | ,, | ... *0—50* |
| *பெரும்பாணாற்றுப்படை* | ,, | ... *1—00* |
| *முல்லைப்பாட்டு* | ,, | ... *0—50* |
| *பட்டினப்பாலை* | ,, | ... *0—75* |
| *நெடுநல்வாடை* | ,, | ... *0—50* |
| *பொருநராற்றுப்படை* | ,, | ... *0—75* |
| *குறிஞ்சிப்பாட்டு* | ,, | ... *0—75* |
| *மதுரைக்காஞ்சி* | ,, | ... *1—25* |

**தண்டியலங்காரம்:—**

பொதுவியல், பொருளணியியல் மூலமும் பழைய உரையும் ... 2—00

**சிலப்பதிகாரம்:—**

| | | |
|---|---|---|
| அடைக்கலக்காதை | உரையுடன் | ... 0—25 |
| காட்சிக்காதையும் கால்கோட்காதையும் | ,, | ... 0—75 |
| காடுகாண்காதையும் நாடுகாண்காதையும் | ,, | ... 0 - 75 |
| கனாத்திறமுரைத்த காதை | ,, | ... 0—25 |

**மணிமேகலை:—**

| | | |
|---|---|---|
| பாத்திரம்பெற்ற காதை | உரையுடன் | ... 0—25 |
| மலர்வனம்புக்க காதை | ,, | ... 0—25 |
| ஆதிரை பிச்சையிட்ட காதை | ,, | ... 0—25 |

**அஷ்டப்ரபந்தம்:—**

| | | |
|---|---|---|
| திருவரங்கக்கலம்பகம் | உரையுடன் | ... 1—50 |
| திருவரங்கத்தந்தாதி | ,, | ... 1—00 |
| திருவேங்கடத்தந்தாதி | ,, | ... 1—25 |
| திருவேங்கடமாலை | ,, | ... 1—00 |

**இதர புத்தகங்கள்:—**

| | | |
|---|---|---|
| திருப்பாவை தமிழ்நடை உரையுடன் | | ... 0—50 |
| வள்ளியம்மை திருமணப்படலம் ,, | | ... 0—75 |
| உதயணன் சரிதை | | ... 0—75 |
| சந்திராபீடசரிதம் | | ... 0—37 |
| நன்னூற்காண்டிகையுரை | உரையுடன் | ... 3—50 |
| சடகோபரந்தாதி | ,, | ... 1—25 |
| சரசுவதியந்தாதி | ,, | ... 0—50 |
| அழகர்கலம்பகம் | ,, | ... 0—62 |
| திருப்பாவை மூவாயிரப்படி | | ... 3—50 |
| பகவத் விஷயம் 10 வால்யூம்கள் | | ... 60-00 |
| திருக்கருவைக்கலித்துறையந்தாதி | உரையுடன் | ... 1—00 |
| ,, வெண்பாவந்தாதி | ,, | ... 0—50 |
| முதுமொழிக்காஞ்சி | ,, | ... 0—50 |
| குமுதவல்லி திருமங்கைமன்னன் | | ... 0—50 |
| திருவிளையாடற்புராணம் (தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்) | | ... 0—60 |
| வேதவிண்ணப்பம் | | ... 0—12 |
| நித்யாநுஸந்தானம் (முன்னடி, பின்னடி திருநக்ஷத்ர தனியன்களுடன்) | | ... 0—50 |
| பகவதாராதனக்ரமம் (ஜீயர்படி) | | ... 0—75 |

---

ஜகன்மோகினி அச்சகம், சென்னை-5. 1960

# வை. மு. கோபாலகிருட்டிணமாசாரியர்

## பதிப்புக்கள்

**கம்பராமாயணம்** ஆறுகாண்டங்கள் 7-வால்யூம்
மூலம், பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்புகள், பாடபேதங்கள், அரும்பொருள் விளக்கம் இவைகளுடன் கூடியது.

**வில்லிபாரதம்** பத்துப்பருவங்கள் 7-வால்யூம்
மூலம், மிக எளிய பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்புகள், கதைச்சந்தர்ப்பங்கள், அரும்பொருள்விளக்கம், அபிதானசூசிகையகராதிகளுடன் கூடியது.

**திருக்குறள்** மூலம், பரிமேலழகர் உரை, பரிமேலழகருரைக்கு விளக்கமான குறிப்புரை இவைகளுடன் கூடியது.

**பத்துப்பாட்டு** (ஒன்பது பாட்டுக்கள்) மூலம், பதவுரை, விசேடவுரை, ஆராய்ச்சியுடன் கூடியது. [மலைபடுகடாம் உரையுடன் விரைவில் வெளிவரும்.]

**தண்டியலங்காரம்** பொதுவியல் பொருளணியியல் - மூலம், பழையவுரை, குறிப்புரை இவைகளுடன் கூடியது.

மற்றும் பல புத்தகங்களும்

இடைக்குமிடம்:—

வை. மு. நரசிம்மன்

**வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி**

17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,

**திருவல்லிக்கேணி, சென்னை-5.**